# கொலம்பியா புதிய வெளியீடு



சங்கீத வித்வான்

## துறையூர்
## ராஜகோபாலசர்மா

பாடிய

**GE. 6316:**

## ராமாபிராம

(தன்யாசி) (2 பாகங்கள்)



ஸ்ரீமதி

## சூடாமணி

பாடிய

**GE. 6321:**

## யாரோ என்றெண்ணமலே

(சங்கராபரணம்) (2 பாகங்கள்)




**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதறாஸ். 2.**



ஸிதாரா
லக்ஸ் டாய்லட் சோப்பினால்
சுலபமாக
அழகுபடுத்திக்கொள்ளும்
முறையை விவரிக்கிறார்




☆ ஸினிமா நட்சத்திரங்கள்
விரும்பும்
அழகையளிக்கும் சோப் ☆



லக்ஸ் டாய்லட்
சோப்பின்
நுரையை
தாராளமாக
சருமத்தின்
மேல்
தடவுகிறேன்.



சுத்தமான,
குளிர்ந்த
ஜலத்தில்
கழுவுகிறேன்.

எழில்வாய்ந்த சருமமே ஒரு ஸ்திரீயின் அரிய பொக்கிஷம். அதனால் மேனியழகை காப்பாற்றிக் கொள்வதில் அசிரத்தையாயிராதீர்கள். லக்ஸ் டாய்லட் சோப்பின் மிருதுவான பாதுகாப்பு முறையைக் கையாளுங்கள். ஸிதாராவின் சுலபமான அழகுபடுத்திக் கொள்ளும் முறையை 30 நாட்கள் ஏன் நீங்களும் பின்பற்றக் கூடாது? மணமுள்ள இவ்வெண்மையான சோப்பின் தாராளமா யுண்டாகும் சுகமளிப்பான முறையை நீங்கள் பிரியப்படுவீர்கள். மேலும் அதன் மிருதுவாக சுத்தம் செய்யும் திறமையைக் கண்டு மகிழ்வீர்கள். ஸினிமா நட்சத்திரங்களுக்கு அழகை யளிக்கும் இம்முறை உங்கள் அருமை சருமத்தையும் அப்பழுக்கற்றதாகவும் பட்டுப்போல் மழமழப்புடையதாகவும் செய்யும்.



பின்பு,
உலர்ந்த
மிருதுவான
துண்டினால்
முகத்தை
துடைக்கிறேன்

# கல்கி
## பொருளடக்கம்


மலர் 6
இதழ் 14

1946 நவம்பர் 3

வியய
ஐப்பசி 18






பாரதத் தாயின் அருந்தவத்தின் பயனாய்ப் பிரம்மதேவன் பிரத்யட்சமானார்.

அன்னையின் பரிதாப நிலைமையைக் கண்டு மனமிரங்கிய நான்முகக் கடவுள், "தாயே, தங்களுக்கு என்ன வேண்டும்?" என்று பரிவுடன் விசாரித்தார்.

பாரதமாதா "விடுதலை வரம் வேண்டும்" என்று கூறியதும் பிரம்மதேவன் சற்றுத் திகைப்படைந்தவராய், "தேவி! அதைத் தவிர்த்து வேறு என்ன வரம் வேண்டுமானாலும் கேளுங்கள்! அது பொல்லாத பிரிட்டிஷ்காரர்களைச் சேர்ந்த விஷயம்; அதில் நான் தலையிட முடியாது!" என்றார்.

பாரதமாதா "அப்படியானால் அவர்களிடமிருந்து என்னை விடுவிக்கக் கூடிய திறமை வாய்ந்த ஒரு வீரப் புதல்வனையாவது அருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

பிரம்மதேவன் முகமலர்ந்து மேற்படி வரத்தை பாரத தேவிக்கு ஈந்தருளினார்.

பாரதத் தாயின் அருந்தவப் புதல்வனாய் அன்றைய தினமே அலகாபாத் ஆனந்தபவனத்தில் பண்டித மோதிலால் நேருவுக்கு ஜவாஹர் பிறந்தார். இன்னும் சில வருஷங்களுக்கெல்லாம் விஜயலட்சுமி பண்டிட் தோன்றினார். இவர்களிருவருடைய பிறப்பினாலும், ஒப்பற்ற தேசத் தொண்டினாலும், மாசு மறுவற்ற தியாக வாழ்க்கையினாலும் இந்தியாவின் நாற்பது கோடி மக்களும் மகத்தான நன்மையை அடைந்தனர்.




ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட், முன் தடவை மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி நடந்த சமயம் ஐக்கிய மாகாணத்தில் மந்திரிப் பதவி வகித்துத் திறமையான பல காரியங்களைச் செய்திருக்கிறார்.

சென்ற வருஷம் ஸான்பிரான்ஸிஸ்கோவில் ஐக்ய தேசங்களின் மகாநாடு கூடியபோது இந்தியா அடிமை தேசம் என்ற காரணத்தினால் ஸ்ரீமதி பண்டிட் மகாநாட்டுக்குள் செல்ல முடியவில்லை. எனவே அவர் மகாநாட்டுக்கு வெளியிலிருந்தே செய்த பல பிரசங்கங்களின் மூலம் இந்தியாவின் பெருமையை அயல் நாடுகளில் நிலைநாட்டினார். இந்தத் தடவை அவர் நியூயார்க் நகரில் நடைபெறும் ஐக்யதேச அசெம்பிளிக்கு இந்தியாவின் உண்மைப் பிரதிநிதியாகச் சென்று செய்து வரும் சேவை மகத்தானது.

மேற்படி மகாநாட்டுக்குச் செல்லும் பொருட்டு ஸ்ரீமதி பண்டிட் இம்மாதம் 13உ அன்று விமானம் ஏறிய சமயம் பண்டித ஜவாஹரும் அவரது குடும்பத்தாரும் உடனிருந்து வழியனுப்பும் காட்சியைத்தான் நமது அட்டை அலங்காரமாகத் தாங்கி நிற்கிறது.

[முன் வரிசை இடது கோடி: ஜவாஹர்லால் நேரு; வலது கோடி: ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்; மத்தியில்: ஸ்ரீமதி சந்திரலேகா பண்டிட் (ஸ்ரீமதி விஜயலட்சுமியின் புத்திரி); பின் வரிசை இடது பக்கம்: ஸ்ரீமதி கிருஷ்ணா ஹத்தி ஸிங் (ஜவாஹரின் மற்றொரு சகோதரி); வலது பக்கம்: ஜவாஹரின் அருமைப் புதல்வியான ஸ்ரீமதி இந்திரா நேரு.]

# இன்னொரு மைல்க்கல்லு கடந்தாகி விட்டது!

ப்ளாஸ்டிக்குகள், ரேயன், இயந்திரக் கருவிகள், மோட்டார்கள் ஆகியவைகள் கைத்தொழில் முன்னேற்ற மார்க்கத்தில் முக்கிய மைல்க்கல்லுகளாக இருந்து வந்துள்ளன. எனினும் பாரத நாட்டுக் கைத்தொழிலடிவானில் அவைகள் பிரத்தியக்ஷப்பட்டது சமீப காலத்தில்தான். ஆனால் ரேடியோ கைத்தொழில், மலிவான விலையிலுள்ள "பீப்பிள்ஸ் ஸெட்"டுடன், வருங்கால நாடுதனில் மேன்மை யோங்கினதோர் ஸ்தானத்திற்கு உரிமை கொண்டாடுகிறது.

## 'தி பீப்பிள்ஸ் ஸெட்'

### கவர்ச்சிகரமான அம்சங்கள்

1. சிறிய வருவாய்க்காரர்களின் சக்திக்குதக்தாப்போல் மலிவான விலை.
2. அதிகப்படியான உழைப்பு.
3. சுலுவாக வேலை செய்விக்கலாம்.
4. குறைந்த கரண்டு செலவு.
5. வாயுமண்டல சம்பந்தமான தொந்தரவே கிடையாது.
6. கிராமபோன் ஆம்ப்ளிபையராகவும் வேலை செய்கிறது.



**தி நாஷனல் ரேடியோ & எஞ்ஜினியரிங் கோ., லிட்.**

விநியோகஸ்தர்கள் — மெஸ்ஸர்ஸ் பஸல்பாய் லிமிடெட்.



கல்கி

மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 14

# என்ன சேதி?

## தலையெழுத்து பலம்

கலியுகப் பிரம்மாவாக அமெரிக்காவிலே வாஷிங்டன் நகரத்திலே வெள்ளை மாளிகையிலே எழுந்தருளியிரா நிற்கும் ஸ்ரீயுத ட்ரூமன் ஸ்வாமி அவர்கள், புகழ் பெற்ற பார்க்கர் 51-ம் நம்பர் பேனாவினாலே ஐக்கிய தேச மகாசபையின் தலையெழுத்தைப் பலமாகவும் அழுத்தமாகவும் திருத்தமாகவும் எழுதியிருக்கிறார். இனிமேல் அதற்கு அபாயம் இல்லை; கொஞ்சங்கூட அபாயமே இல்லை. கற்ப கோடி காலம் வரை இந்த நெடிய கடல் சூழ்ந்த உலகத்திலே சிரஞ்சீவியாக வாழ்ந்திருக்கும்.

பிரஸிடெண்ட் ட்ரூமன் சென்ற வியாழக்கிழமை யன்று அமெரிக்காவில் கூடிய மேற்படி மகாசபைக் கூட்டத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில், அமெரிக்கா தன்னுடைய சக்தியையெல்லாம் உபயோகித்து மேற்படி ஐக்கிய தேச மகாசபையைப் பாதுகாக்கும் என்று வாக்களித்திருக்கிறார்.

இது உலகத்துக்கும் உலக சமாதானத்துக்கும் ஐக்கிய தேச மகாசபைக்கும் மிக்க சந்தோஷமளிக்கத் தக்க செய்தியாகும்.

முன்பு சர்வதேச சங்கம் அகாலத்திலே மரணமடைந்ததற்கு, அமெரிக்கா அதில் சேர்ந்து ஒத்துழைக்காதது ஒரு முக்கிய காரணமாகும். நல்ல வேளையாக இப்போது அந்த மாதிரியான ஆபத்து எதுவும் இல்லை. கலியுகப் பிரம்மாவான ட்ரூமன் ஐக்கிய தேச மகாசபைக்கு எல்லாவிதமான உதவியையும் அளிப்பதாக வாக்களித்திருக்கிறார்.

உலக மகா வல்லரசாக-ஏன்-உலகத்திலேயே பெரிய வல்லரசாக விளங்கும் அமெரிக்காவின் உதவி கிடைத்திருக்கும்போது இனி ஐக்கிய தேச மகா சபைக்கு என்ன பயம்?

## ஆனால்?

ஆனால், ட்ரூமன் ஐக்கிய தேச மகா சபைக்கு அளிக்கும் உதவியானது, 'ஆப்பரேஷன் வெற்றிகரமாக நடந்தது; நோயாளிதான் பரலோகத்திற்குப் போனான்' என்ற கதையாக அல்லவா முடியும் போலிருக்கிறது?

ஐக்கிய தேச மகாசபை என்ன இலட்சியத்துக்காக ஏற்படுத்தப்பட்டதோ அந்த இலட்சியம் நிறைவேறுமென்று தோன்றவில்லையே!

ஐக்கிய தேச மகாசபை அமெரிக்காவின் உதவி பெற்று என்றும் சிரஞ்சீவியாக நிற்கும். ஆனால், மற்றொரு உலக மகா யுத்தம்தான் ஜாம் ஜாமென்று மேளதாளத்தோடு வரும்!

ஐக்கிய தேச மகாசபை தோன்றி, சென்ற ஒரு வருஷ காலமாக நடத்தி வரும் காரியங்களைப் பார்ப்பவர்களுக்கு மூன்றாவது உலக மகா யுத்தம் நிச்சயம் என்று தோன்றுவது இயற்கையே அல்லவா?

மேற்படி மகாசபையில் நாள்தோறும் மாலடாவ், பெவினுடைய கழுத்தைப் பிடிப்பதையும் பெவின், மாலடாவின் கழுத்தைப் பிடிப்பதையும் பார்த்து வருபவர்கள் உலக மகா யுத்தம் இன்றோ நாளையோ வரும் என்று கருதுவது இயல்பு அல்லவா?

சுருங்கக் கூறினால், மற்றொரு மகா யுத்தம் வருமானால் அதற்கு வேறு ஒரு காரணமும் இராது. இந்த ஐக்கிய தேச மகாசபைதான் காரணமாக இருக்கும்.

## எதற்கு உதவி?

இத்தகைய ஒரு ஸ்தாபனத்துக்கா பிரஸிடெண்ட் ட்ரூமனும் அமெரிக்காவும் உதவி யளிக்க வேண்டும்! அதனால் யாருக்கு என்ன பிரயோசனம்?

கொஞ்ச காலத்துக்குப் பின்னாலே வரும் உலக யுத்தம், இன்னும் கொஞ்ச காலத்துக்கு முன்னாலேயே அல்லவா வந்து தொலையும்?

இதை யெல்லாம் கவனிக்காமல் ஜனாதிபதி ட்ரூமன் உலகத்தைப் பார்த்து,

"யுத்தம் வராது; யுத்தம் வராது!" என்று அபயங் கொடுப்பதிலே அர்த்தம் இல்லை.

யுத்தத்தைத் தடுப்பதிலும் உலகத்திலே சமாதானத்தை ஏற்படுத்துவதிலும் பிரஸிடெண்ட் ட்ருமனுக்கு உண்மையாகவே அக்கரை இருக்குமானால் அவர் ஒன்று செய்ய வேண்டும்.

இந்த ஐக்கிய தேச மகாசபையைக் கலைத்து அது இருக்குமிடம் யாருக்கும் தெரியாமல் மறைக்க வேண்டும். அல்லது, மேற்படி ஐக்கிய தேச மகாசபை உலகத்திலே சமாதானம் ஏற்படுத்துவதற்கு முன்பு, தனக்குள் சமாதானத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

## அவருக்கும் தெரியும்

பிரஸிடெண்ட் ட்ருமனுக்கு இது தெரியாமல் இல்லை. நன்றாகத் தெரிந்தே இருக்கிறது. அவர் தம்முடைய பிரசங்கத்தில் இதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். ஐக்கிய தேச மகாசபையில் அங்கம் வகிக்கும் நாடுகள் இரு கட்சிகளாகப் பிரிந்து நின்றால் உலகத்துக்கு நாசம் உண்டாகும் என்று அவர் கூறியிருக்கிறார்.

பிரஸிடெண்ட் ட்ருமன் சொல்லும் அத்தகைய நாசத்தை நோக்கியே இன்று உலகமும் ஐக்கிய தேச மகா சபையும் போய்க்கொண்டிருக்கின்றன.

அதைத் தடுத்து நிறுத்தவேண்டியது அவசியம் அல்லவா? ஐரோப்பிய வல்லரசுகளுக்கிடையே விரைவில் ஒற்றுமை ஏற்படுத்த வேண்டியது அத்தியாவசியம் அல்லவா?

பிரஸிடெண்ட் ட்ருமன் சண்டை பிடிக்கும் சுபாவத்தை விட்டுக் கொஞ்சம் தாராள புத்தியையும் பரந்த மனப்பான்மையையும் காட்டினால் இந்தப் பேராபத்தைத் தடுக்கலாம். ஐக்கிய தேச மகாசபையில் ஐக்யத்தை ஏற்படுத்தலாம்.

மேற்படி ஐக்கியத்தை முதலாவதாக ஏற்படுத்தாமல், பிரஸிடெண்ட் ட்ருமன் ஐக்கிய தேச மகாசபையின் தலையெழுத்தைப் பலமாக எழுதிப் பலன் இல்லை. 'யுத்தம் வராது, யுத்தம் வராது!' என்று உலகத்தைப் பார்த்துச் சொல்வதிலும் அர்த்தம் இல்லை.




தென்னாப்பிரிக்க இந்தியர் பிரச்னையை ஐக்ய தேச அமைப்பினரின் விவாதிக்கக் கூடாதென்று ஸ்மட்ஸ் துரையின் அபிப்பிராயத்தை இந்தியாவுடன் சேர்ந்து மற்ற தேசத்துப் பிரதிநிதிகளும் பலமாக ஆட்சேபித்தார்கள்.

# அந்தஸ்து உயர்கிறது!

நேயர்கள் சற்றே தயவு செய்து அமெரிக்கா இருக்கும் திக்கு நோக்கித் தங்கள் கண்ணோட்டத்தைச் செலுத்த வேண்டும். வானளாவ உயர்ந்து நிற்கும் நியூயார்க் நகரத்தின் மாட மாளிகைகளையும், கூட கோபுரங்களையும் பார்க்க வேண்டும். அந்தக் கட்டிடங்கள் ஒன்றின்மீது ஐம்பத்து நாலு தேசத்துக் கொடிகளும் பறக்கின்றன அல்லவா? அங்கே நமது இந்தியா தேசத்தின் கொடியும் ஏன் பறக்கவில்லை என்றுதானே யோசிக்கிறீர்கள்?

அதோ, நன்கு உற்றுப் பாருங்கள்! வானத்தை முட்டும் கூட கோபுரங்களுக்கெல்லாம் மேலே இந்தியாவின் புகழ்க் கொடி பறப்பதைக் கண் திறந்து காணுங்கள்!

அந்தக் கொடிகளைத் தாங்கிக் கொண்டு நிற்கும் மாபெரும் மண்டபத்துக்குள்ளேதான் இப்போது 'ஐக்ய தேச ஸ்தாபனம்' என்று சொல்லப்படும் சர்வதேச சாம்ராஜ்யாதிபதிகளின் மகா சபை கூடியிருக்கிறது.

மேற்படி மகா சபைக்கு 54 தேசத்தைச் சேர்ந்த 560 பிரதிநிதிகள் விஜயம் செய்திருக்கிறார்கள்.

இந்தியா தேசத்தின் சார்பாக, நமது மாபெரும் தலைவர் ஜவாஹர்லால் நேருவின் சகோதரி ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்டும் விஜயம் செய்து, சர்வதேசப் பிரதிநிதிகளுடன் சரிநிகர் சமானமாக வீற்றிருக்கிறார். முதன் முதலாக சுதந்திர இந்தியாவின் சுதந்திரப் பிரதிநிதியாக ஒரு சர்வதேச ஸ்தாபனத்துக்குச் செல்லும் பாக்கியம் அவருக்குக் கிடைத்திருக்கிறது.

ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் மேற்படி மகா சபையில் செய்துள்ள பிரசங்கம் காரணமாக இந்தியாவின் அந்தஸ்தும் புகழும் உலகத்தின் முன் உயர்ந்துவிட்டதைக் காண இந்திய மக்களும் பாரத நாட்டுப் பெண்மணிகளும் பூரித்துப் போகிறார்கள்.

* * *

சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு மேற்படி 'ஐக்ய தேச ஸ்தாபனம்' ஸான் பிரான்ஸிஸ்கோ நகரத்தில் உருவாயிற்று. அப்போது அந்த ஸ்தாபனத்திற்கு யுத்தத்தில் ஜயமடைந்த வல்லரசுகளும் சிற்றரசுகளும் தங்கள் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பியிருந்தன. நமது இந்தியா தேசத்திலிருந்தும் அதிகார வர்க்கத்தின் சார்பாக இரண்டு மூன்று பிரதிநிதிகள் போயிருந்தார்கள். போனவர்கள் இந்திய அதிகார வர்க்கம் கையைத் தூக்கச் சொன்ன சமயம் தூக்கிவிட்டு, கை நாட்டுப் போடச்சொன்ன இடத்தில் போட்டு விட்டுத் திரும்பி வந்து சேர்ந்தார்கள்.

அந்தக் கண்ணராவிக் காட்சியைப் பத்திரிகைகளில் படித்தபோது நாம் அடைந்த வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. அந்த வருத்தத்தை நாம் அப்போதே பின்வருமாறு வெளியிட்டிருந்தோம்:

சான்பிரான்ஸிஸ்கோ மகாநாட்டுக்கு சர் பெரோஸ்கான் நூன் போன்றவர்கள் போவதற்குப் பதிலாக பண்டித ஜவாஹர்லால் நேருவோ ஸ்ரீ வல்லபாய் பட்டேலோ போகக் கூடுமானால் இந்தியாவின் அந்தஸ்து உலகத்தின் முன்னால் எவ்வளவு உயரும் என்பதை யோசித்துப் பாருங்கள்.......

அமெரிக்காவில் ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் செய்யும் பிரசங்கத்தைக் கண்டு 'டெயிலி மெயில்' நிருபர் முதலியோர் ஏன் இவ்வளவு மிரளுகிறார்கள் என்பதையும் சற்றுக் கவனியுங்கள். .....

மேற்படி சான்பிரான்ஸிஸ்கோ மகாநாட்டிலேயே ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் இந்தியாவின் கட்சியை எடுத்துச் சொல்ல முடியுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்?

நம்முடைய ஆசை நிறைவேறுவதைக் கண்டு நாம் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். மேற்படி ஐக்ய தேச மகா சபையின் ஆரம்பக் கூட்டத்தில் ஸ்ரீமதி பண்டிட் தென்னாப்பிரிக்க இந்தியர்களின் உரிமையைக் கோரி செய்துள்ள வீரப் பிரசங்கத்தைப் பத்திரிகைகளில் படிக்கும்போது நம்முடைய ஆனந்தம் அளவு கடந்ததாகிறது.

சில மாதங்களாக தென்னாப்பிரிக்க யூனியன் சர்க்கார் இந்தியர்களுக்கு இழைத்து வரும் அநீதியை நேயர்கள் அறிவார்கள். அங்கே வாழும் இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை கிடை



பண்டிட் ஜவாஹர்லால் நேரு எல்லைப்புறத்துக்கு விஜயம் செய்தபோது

யாது. நிற வேற்றுமை காரணமாக வெள்ளைக்காரர்களுடன் சேர்ந்து வாழும் சம அந்தஸ்தும் கிடையாது. ஓட்டுரிமை கிடையாது. இந்த அநீதியை எதிர்த்துப் போராடி சத்தியாக்கிரகம் செய்ததன் காரணமாக மகாத்மா காந்தியின் புதல்வர் மணிலால் காந்தி உள்பட சுமார் ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

தென்னாப்பிரிக்கத் தலைவரான ஜெனரல் ஸ்மட்ஸ் துரை இதையெல்லாம் ஒன்றுமே அறியாதவரைப் போல் ஐக்கிய தேச மகா சபையில் ஆஜராகியிருக்கிறார்.

உலகத்தில் சமாதானம் நிலவவும், மனித சமூகத்தின் அடிப்படையான உரிமைகளைப் பாதுகாக்கவும், இனவேற்றுமை நிற வேற்றுமையின்றி வாழவும், அடிமை நாடுகளின் விடுதலைக்காகவும் மேற்படி மகாசபை ஒரு வருஷத்துக்கு முன்னால் சான் பிரான்ஸிஸ்கோ நகரில் கூடி ஒரு சாஸனம் தயாரித்தது. அந்தச் சாஸனத்தைத் தயார் செய்து கையெழுத்துப் போட்ட ஐம்பது தேசங்களில் தென்னாப்பிரிக்காவும் ஒன்று. சாஸனத்தின் சிருஷ்டி கர்த்தாக்களில் ஜெனரல் ஸ்மட்ஸும் ஒருவர்.

ஆனால் இன்று தென்னாப்பிரிக்காவில் அவருடைய ஆட்சியின் கீழ் நடைபெறும் அக்கிரமத்தையும் அநீதியையும் பார்க்கும்போது உலக சமாதானம், மனித வர்க்கத்தின் உரிமைகள், சமூக சமத்துவம் என்பதெல்லாம் ஏட்டளவில்தானோ என்று ஐயுற வேண்டியிருக்கிறது.

“இதற்குச் சங்கம் ஒரு கேடா? சாஸனம் ஒரு கேடா?” என்றும் கேட்கத் தோன்றுகிறது.



சிற்சில இடங்களில் அவருக்கு அமோகமான வரவேற்பும் கிடைத்தது.

என்றாலும் இந்தியர்களின் உரிமை இந்த ஸ்தாபனத்தின் மூலமாகக் காப்பாற்றப்படும் என்பதற்காக நாம் அங்கே செல்லவில்லை. நமது கோரிக்கையின் மூலமாக சர்வதேச ஸ்தாபனத்தின் பலத்தைச் சோதிக்கவும் நாம் அங்கே போகவில்லை.

பின் எதற்காகச் சென்றோமென்றால், உலகத்தின் முன்பாக இந்தியாவின் நியாயமான கட்சியை எடுத்துச் சொல்லுவதற்காகத்தான். ஆனால் ஸ்மட்ஸ் துரை நம்முடைய எண்ணத்தை ஈடேற முடியாதபடிச் செய்ய வேண்டும் என்பதற்காக என்னவெல்லாமோ பிரயத்தனங்கள் செய்து பார்த்தார். ''தென்னாப்பிரிக்க இந்தியர்களின் பிரச்னை உள்நாட்டு விவகாரம்'' என்று சொல்லி மழுப்பி மேற்படி பிரச்னையை ஐக்கிய தேச அசெம்பிளியில் விவாதத்துக்கு வர விடாமல் அமுக்கிவிட வேண்டுமென்று முயற்சி செய்து பார்த்தார்.

ஆனால் அந்த அநீதியை அம்பலப்படுத்த வேண்டும் என்பதற்காகவே அமெரிக்காவிற்குப் பறந்து சென்றிருக்கும் ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் மேற்படி பிரச்னையைக் கிளப்பிவிட்டிருக்கிறார். ''இது உள்நாட்டு விவகாரமல்ல; சர்வதேசங்களுக்கும் பொருந்தும் பொதுவான விஷயந்தான். ஐக்கிய தேசங்கள் சேர்ந்து தயாரித்த சாஸனத்திலேயே இந்த விஷயத்துக்கு இடமளிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த விஷயத்தை விவாதத்துக்கு எடுத்துக் கொண்டு தீர்ப்புக் கூற வேண்டியதும் இந்தச் சபையினுடைய பொறுப்பாகும்'' என்று அழுத்தமாகக் கூறியிருக்கிறார். அத்துடன் பந்தோபஸ்துக் கௌன்ஸிலில் இந்தி

யாவும் ஒரு ஸ்தானத்தைப் பெற வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார். அதற்கான காரணங்களையெல்லாம் அலசிவிட்டு யுத்தத்தில் சேவை செய்த நாடுகள்தான் மேற்படி கௌன்ஸிலில் இடம் பெற வேண்டுமென்றால் இந்தியாவும் இந்த யுத்தத்தில் மகத்தான சேவைகளைச் செய்திருக்கிறதென்றும் 25 லட்சம் இந்தியத் துருப்புகள் யுத்தத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றன வென்றும் கூறி, இந்தியாவின் பூகோள அமைப்பையும் ஆதாரமாகக் காட்டி விவாதம் செய்திருக்கிறார்.

ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்டின் ஆணித்தரமான பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்த ஐம்பத்துநாலு தேசத்துப் பிரதிநிதிகளும் கரகோஷம் செய்து அவருடைய அபிப்பிராயத்தை ஆமோதித்திருக்கிறார்கள். தென்னாப்பிரிக்க இந்தியர் பிரச்னை சம்பந்தமாக ஸ்ரீமதி பண்டிட்டின் கோரிக்கையை சீனா, அமெரிக்கா, ருஷ்யா, பிரான்ஸ், ஸிரியா முதலிய பல தேசங்களும் ஆதரித்திருக்கின்றன. முக்கியமாக ருஷ்ய வெளிநாட்டு மந்திரி மாலடோவ் இந்தியாவின் கோரிக்கையை உடனே விவாதத்துக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சக்கைப் போடு போட்டிருக்கிறார்.

இப்படியாக மற்ற தேசத்துப் பிரதிநிதிகளெல்லாம் ஆமோதித்திருக்கும் போது, தென்னாப்பிரிக்கத் தலைவர் ஜெனரல் ஸ்மட்ஸ் துரை மட்டும் ஆடாமல் அசையாமல் கல்லுப் பிள்ளையார் போல் உட்கார்ந்திருந்தாராம். பாவம்! ஜெனரல் ஸ்மட்ஸ் துரையின் பரிதாப நிலைமையைக் கண்டு இரங்குகிறோம்.

* * *

ஐக்கிய தேச அஸெம்பிளியில் நமக்குச் சாதகமான தீர்ப்புக் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் பாதகமில்லை. சர்வ தேச சபையின் முன்பாக நம்முடைய கட்சியை எடுத்துச் சொல்லுவதற்கும் இந்தியாவின் உண்மைக் குரல் அங்கே எதிரொலி செய்வதற்கும் சந்தர்ப்பம் கிடைத்தது ஒன்றே போதுமானது. மேற்படி அரிய சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டதற்காகவும் நமது பிரசங்கத்தின் மூலம் இந்தியாவின் அந்தஸ்தை உயர்த்தி விட்டதற்காகவும் ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைச் செலுத்துகிறோம்.




"இடைக்கால சர்க்காரில் சேர்ந்துள்ள முஸ்லீம் லீகும் காங்கிரஸும் ஒன்று சேர்ந்து சௌஜன்யமாகவும் ஒற்றுமையுடனும் வேலை செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன்" என்று வைஸ்ராய் வேவல் துரை சென்ற 28உ யன்று ரேடியோவில் பேசினார்.

# "கல்வி சிறந்த தமிழ்நாடு"

மகாகவி பாரதியாரின் மேலே கண்ட அருள் வாக்கு அகஸ்திய முனிவரின் காலத்திலிருந்து இன்று வரையில் உண்மையாக இருந்து வந்திருக்கிறது. நம் அருமைச் செந்தமிழ் நாடு தமிழ்க் கல்வியிலே மட்டுந்தான் சிறந்து விளங்கிற்று என்பதில்லை. வடமொழிப் புலமையிலும் இணையில்லாத சிறப்பு வாய்ந்திருந்தது. காசி நகர்ப் புலவர்கள் வடநாட்டிலே தங்கள் புலமையைப் பாராட்டுவாரைக் காணாமல் காஞ்சி மன்னர்களைத் தேடிவந்த காலமும் உண்டு. காஞ்சி நகர்ப் புலவர்கள் காசிப் புலவர்களை விவாதப் போரில் முறியடித்ததும் உண்டு.

அதே மாதிரி இந்தக் காலத்தில் ஆங்கில பாஷையில் ஆங்கிலேயரே பார்த்து அதிசயப்படும்படியான புலமை வாய்ந்தவர்கள் சிலர் தென்னிந்தியாவில் இருக்கிறார்கள். இத்தகைய தலைசிறந்த புலவர் கோஷ்டியில் ஸ்ரீ சாரநாத ஐயங்கார் அவர்களையும் ஸ்ரீ எ. ராமையர் அவர்களையும் சேர்க்க வேண்டும். ஸ்ரீ சாரநாத ஐயங்கார் அவர்கள் ஆங்கிலப் புலமையோடு தமிழிலேயும் ஆர்வம் உடையவர். ஸ்ரீ எ. ராமையரோ ஆங்கிலம் தமிழோடுகூட, தேசிய பாஷையான ஹிந்துஸ்தானியிலும் நிபுணர்! இப்படித் தமிழ்நாட்டு ஆசிரியர் கோஷ்டியில் எத்தனையோ பேர் இருப்பதை எண்ணும்போதுதான், "கல்வி சிறந்த தமிழ்நாடு" என்னும் பாரதியார் அருள் வாக்கு எத்தனை பொருள் பொதிந்த வாக்கு என்பதை உணர்கிறோம்.

ஸ்ரீ சாரநாதய்யங்கார், ஸ்ரீ ராமய்யர் போன்றவர்கள் சாதாரணமாய்க் கவர்ன்மெண்ட் கலாசாலைகளில் ஆசிரியர்கள் பெறும் சம்பளத்தில் பாதிக்குக் குறைவாக வாங்கிக்கொண்டும், அதிலும் ஒரு பகுதியைக் கலாசாலைக்குத் திரும்ப அளித்துக் கொண்டும், திருச்சி நேஷனல் காலேஜைப் போற்றி வளர்த்து வந்திருக்கிறார்கள்.

இருபத்தைந்து வருஷ காலம் அந்த அரிய தேசிய ஸ்தாபனத்துக்கு இடைவிடாத தியாகத் தொண்டு செய்த பிறகு ஸ்ரீ சாரநாத ஐயங்கார் 'பிரின்ஸ்பால்' பதவியிலிருந்து விலகிக் கொள்ளப் போகிறார். அப்படி விலகிக் கொள்ளுவதற்கு முன்னால் தாம் வளர்த்த ஸ்தாபனம் வருங்காலத்தில் செழித்து வளரும் என்ற நம்பிக்கை ஏற்படுமானால், அது அவருக்கு எவ்வளவோ சந்தோஷமளிக்கும் விஷயமல்லவா?

* * *

அக்டோபர் 20உ நேஷனல் காலேஜ் வைர விழா நிதிக்காகத் திருச்சியில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடைபெற்றது. முன் வரிசையில் அக்கிராசனம் வகித்த ஜில்லா கலெக்டர் ஸ்ரீ வர்க்கீஸ் அவர்களுக்குப் பக்கத்தில் பிரின்ஸ்பால் சாரநாத ஐயங்காரும் அமர்ந்து தமது முகமலர்ச்சியினால் அகத்தின் மகிழ்ச்சியைப் புலப்படுத்திக் கொண்டிருந்தார். "சங்கீதக் கச்சேரி என்றால், எல்லாம் சங்கீதக் கச்சேரியாகுமா? இதுவல்லவா கச்சேரி?" என்று ஒவ்வொரு நிமிஷமும் அவருடைய முகபாவம் தெரியப்படுத்திக் கொண்டிருந்தது. அந்தக் கச்சேரியின் மூலம் தாம் வளர்த்த கலைமகள் ஆலயத்துக்கு ரூ. 40,000 சேர்ந்தது என்னும் எண்ணம் அவருக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியை அளித்ததில் வியப்பு ஒன்றுமில்லைதானே?

* * *

சங்கீதரத்ன சௌடய்யாவின் நிஞ்சாமிர்தமான பிடில் வாத்தியம், கல்பாத்தி ராமநாதன் மிருதங்கம், கோயமுத்தூர் ராஜப்பய்யர் கஞ்சிரா, ஆலங்குடி ராமச்சந்திரன் கடம் ஆகிய பக்கவாத்திய உதவிகளுடன் முருகன் டாக்கீஸ் கொட்டகையில் ஸ்ரீமதி எம். எஸ். வின் கச்சேரி அமோகமாக நடந்தது.

முருகன் டாக்கீஸின் சொந்தக்காரர்கள் அந்தக் கொட்டகையை அன்று மனமுவந்து கைங்கரியமாக அளித்திருந்தார்கள். ஆனாலும் சினிமாக் கொட்டகைக்கும் சங்கீதக் கச்சேரிக்கும் அவ்வளவு பொருத்தமில்லையல்லவா? இதை அன்று கச்சேரிக்கு அக்கிராசனம் வகித்த கலெக்டர் வர்க்கீஸ் மிக ரஸமாகக் குறிப்பிட்டுப் பேசினார். பாடகியைப் பார்த்து, "உங்களுடைய அபூர்வமான சங்கீதத்துக்கு இந்த இடம் கொஞ்சம் கூடப் பொருத்தமில்லைதான். ஆயினும்

மீரா படத்தில் 'இந்த அரண்மனை வாழ்வு எனக்குத் தகுதி யில்லாதது' என்று சொல்லிவிட்டு இறைவனைத் தேடிக் கொண்டு போனதுபோலப் போய்விடாமல் இம்மாதிரி இடங்களிலும் பாடி நல்ல காரியங்களுக்கு உதவி செய்கிறீர்கள்! இம்மாதிரியே நெடுங்காலம் செய்துகொண்டிருக்கள்!" என்று வாழ்த்தியது மிக அழகா யிருந்தது.

நேஷனல் காலேஜ் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ ஆர். சீனிவாசய்யர், காலேஜின் வைரவிழா நிதிக்கு உதவி செய்தவர்கள், செய்கிறவர்கள், செய்யப் போகிறவர்கள் எல்லாருக்கும் சாங்கோபாங்கமாக நன்றி கூறினார். கடைசி கடைசியாக அவர் ஸ்ரீ எல். என். எஸ். மணியின் பெயரைக் குறிப்பிட்டதும், அதுவரையில் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த ஸ்ரீ மணி ஒரே ஓட்டமாக வாசற் பக்கம் ஓடிய காட்சி சபையோருக்கு அபாரமான குதூகலத்தை உண்டாக்கிற்று! ஸ்ரீ எல். என். எஸ். மணிக்கு அதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும் என்று எல்லாரும் ஒரு முகமாக அபிப்பிராயப்பட்டார்கள். உண்மையென்ன வென்றால், திருச்சி நகரமும் சரி, ஜில்லாவும் சரி, தாராளமான நன்கொடைகளின் விஷயத்தில் அவ்வளவு பிரசித்தி பெற்றதல்ல! அப்படிப்பட்ட இடத்தில் இந்தக் கச்சேரிக்கு ரூ. 40 000 வருவாயிற்று என்றால், அதற்குரிய பெருமையில் பெரும் பகுதி ஸ்ரீ எல். என். எஸ். மணியின் ஊக்கம், இடைவிடா உழைப்பு, அவருடைய அதிர்ஷ்டக் கை ஆகியவற்றுக்குத்தான் போய்ச் சேரவேண்டும்.

★ ○ ★

# நேஷனல் காலேஜ் வைரவிழா நிதி

**8-9-46 "கல்கி"யின் வெளியான ஜாபிதாவுக்குப் பிறகு பின்வரும் நன்கொடைகள் அளிக்கப் பட்டிருக்கின்றன.**

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ எம்பெருமானுர் செட்டியார், மெஸ்ஸர்ஸ் வி. பெருமாள் செட்டி அண்டு சன்ஸ், சென்னை | 1116 | 0 | 0 |
| ஸ்ரீ பி. என். எஸ். ஐயர், அக்கௌண்டண்ட் அண்டு ஆடிட்டர், சென்னை | 1000 | 0 | 0 |
| ஸ்ரீ டி. வி. முத்துகிருஷ்ண ஐயர், அட்வகேட், சென்னை | 1000 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எஸ். வாசன், ஜெமினி ஸ்டுடியோ, சென்னை | 500 | 0 | 0 |
| திவான்பகதூர் ஏ. எம். முருகப்பச் செட்டியார், சென்னை | 500 | 0 | 0 |
| மெஸர்ஸ் சித்ரா அண்டு கோ., ஸ்டாக் அண்டு ஷேர் ப்ரோக்கர்ஸ், சென்னை | 500 | 0 | 0 |
| குமாரராஜா ஸர் எம். ஏ. முத்தையா செட்டியார், சென்னை | 500 | 0 | 0 |
| மெஸர்ஸ் டலால் அண் கோ, ஸ்டாக் அண் ஷேர் ப்ரோக்கர்ஸ், சென்னை | 500 | 0 | 0 |
| தி இங்கிலீஷ் ஸைகில் அண் மோட்டார் இம்போர்ட்டிங் கம்பெனி, பிராட்வே, சென்னை | 500 | 0 | 0 |
| தி ராயல் ஸைகில் அண்டு மோட்டார் கம்பெனி, சென்னை | 500 | 0 | 0 |
| ஸ்ரீ அனந்தராம கிருஷ்ணன், ஸிம்ஸன் கம்பெனி, சென்னை | 250 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ரங்கராஜன், உதவி ஆசிரியர், "ஹிந்து" சென்னை | 250 | 0 | 0 |
| ஸ்ரீ எல். வெங்கட்ராமன், இந்தியன் பாங்க், சென்னை | 200 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சூர்யநாராயண, போக் ரோடு, தியாகராய நகர். | 200 | 0 | 0 |
| ஸ்ரீ ராவல் எஸ். கிருஷ்ணையர், கட்டிட நிபுணர், சென்னை | 200 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். சதானந்தம், ஆசிரியர் "ப்ரீ பிரஸ் ஜர்னல்", பம்பாய் | 108 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். வைத்தியநாதன், மெஸர்ஸ் பாட்டர்ஸன் அண்டு கோ, சென்னை | 101 | 0 | 0 |
| மெஸர்ஸ் ராஜ் அண்டு கோ, ஸ்டாக் ப்ரோக்கர்ஸ், சென்னை | 100 | 0 | 0 |
| ராவ்பகதூர் ஏ. நாதமுனி செட்டியார், சென்னை | 50 | 0 | 0 |
| ஸ்ரீ கே. கிருஷ்ணமூர்த்தி, மோப்ரேஸ் ரோடு, மயிலாப்பூர். | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. டி. ராமஸ்வாமி, மயிலாப்பூர், சென்னை | 25 | 0 | 0 |

# அரியதோர் சங்கீத உற்சவம்

[ச. கிருஷ்ணய்யர் பி. ஏ., பி. எல்.,]

நல்ல பொது விஷயங்கள் வெற்றிகரமாய் நிறைவேறுவதற்கோ, அவைகளுக்கான நிதி சேர்ப்பதற்கோ, தமிழ் நாட்டில், நம் கலைகள் உதவுவதுபோல், வேறு எதுவுமே உதவுவதில்லை. அதிலும், கலைக்காகவே தம் வாழ்நாள் முழுவதும் தொண்டு செய்துவந்த குலமங்கலம் வைத்யநாத பாகவதரின் ஞாபகச் சின்னம் ஏற்படுத்தும் பொதுக் காரியம் என்றால், பிரபல வித்வான்கள் உற்சாகமாய் முன்வந்து உதவி செய்வதற்குக் கேட்கவேண்டுமா? இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சங்கத்தின் ஆதரவில், கோகலே ஹாலில், அக்டோபர் 24உ சித்தூர் சுப்ரமணிய பிள்ளை முதல், 30உ தண்டபாணி தேசிகர் ஈறாகப் பல கலைவாணர்கள் இலவசமாய்ச் செய்த கச்சேரிகளாலான சங்கீத உத்ஸவம் கோலாகலமாய் நடந்தேறியது ஆச்சரியமில்லை.

25உ கேட்ட மகாராஜபுரம் விச்வநாதய்யரின் கானம் அருமையாய் அமைந்தது. அவர் ஆழ்ந்த ஞானமும், பலவருஷ அநுபவமும், வெகு ஜனங்களுக்கான வழியுங் கொண்டதோர் 'ஸீனியர்' வித்வான். அன்று நன்றாய் உழைத்துப் பாடினார். ஆபி, கல்யாணி, தர்பார், சங்கராபரண ராகங்கள், சவிஸ்தாரமாகவும் கற்பனைச் செறிப்பும் கொண்டு விளங்கின. ஆனந்த பைரவியும் 'மரிவேரே' கிருதியும் எழிலில் எல்லாவற்றையும் தூக்கியடித்தன. அவருக்குப் பக்க வாத்யம் வாசித்த பிடில் வித்வான், அநுபவம் முதிர்ந்த திருவாலங்காடு சுந்தரேசய்யர் பாடகரின் வழிக்கேற்ப, அழகுபடப் பின்பற்றினார். கோவை ராஜப்பய்யரின் மிருதங்கமும், வில்வாத்ரி அய்யரின் கடமும் கச்சேரியை நன்கு போஷித்தன.

26உ பாடிய வஸந்தகுமாரி, நாளுக்கு நாள் பிராபல்யமடைந்து வரும் இளம் பாடகி. அபூர்வ ஞானம் படைத்த அய்யாசாமி பாகவதரிடம் பயிற்சி பெற்றவர். தங்கு தடையில்லாத குரலில், தேசலில்லாத பிர்க்காப் பொழிவும், கற்பனைப் பெருக்கும் கொண்டு, கடினமான பிடிகளைக்கூட அநாயாசமாய்க் கொடுத்து, தோடி, கல்யாணி, ஷண்முகப்ரியா ராகங்களை இழைத்தார். தாளக்கட்டும், அரிய வேலைப்பாடுகளும் கொண்ட நுட்பமான ஸ்வரப்ரஸ்தாரங்களை, ராகபாவம் ததும்பப் பாடினார், பக்க வாத்தியம் வாசித்த வயலின் ராஜம் அய்யரும், மிருதங்கம் கிரீசனும், கச்சேரியை நன்கு சமாளித்தார்கள்.

மதுரை மணியின் சங்கீதம் என்றாலே, தனிச் சிறப்பும் விருவிருப்பும் கொண்டது என்பது 27உ நடந்த அவரது கச்சேரியிலும் நிரூபிக்கப்பட்டது. பூர்வி கல்யாணி, மோஹனம், பைரவி ராகங்களே அதற்கு அத்தாட்சி. 'இந்தப் பாராமுகம்,' 'யாரோ இவர் யாரோ' உருப்படிகளின் நிரவல் ஸ்வரப்ரஸ்தாரங்களில் அவரது பிரத்யேக வழி இலங்கும் அரிய வேலைப்பாடுகளைக் காட்டினார். அதற்கேற்றாற்போல் கோவிந்தசாமி நாயக்கரின் வயலினும், கண்ணனின் மிருதங்கமும் அழகாயமைந்தன.

இந்தக் கச்சேரித் தொடரில், 'பேபி கமலா'வின் நாட்டியத்தையும் 27உ சேர்த்தது, ஏற்பாடு செய்தவர்களின் கலைருசியை எடுத்துக் காட்டிற்று. அந் நாட்டியம், அக் கலையில் நிபுணராயிருந்த வைத்தியநாத பாகவதரின் ஆத்மாவுக்குத் திருப்தி யளித்திருக்கும். சிறு வயதாயிருந்தும், பூர்வஜன்ம புண்யத்தினாலான இயற்கைக் கலை வாசனையுடனும், ராமய்யா நட்டுவனாரின் சிறந்த பயிற்சியாலும், தன்னறிவினாலும், பரத நாட்டியத்தை வியக்கத்தக்க நிலை, நடை எழிலுடன் விளக்கிக் காட்டும் வல்லமை கொண்ட இப் பெண்மணி, அன்றைக்கும் வெகு லாகவமாய் ஆடினார். அடவு ஜாதிகளின் தாளக் கச்சிதமும், கோவையழகும், 'மதுரா நகரிலோ', 'வெற்றி முரசு', 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே' என்ற பாட்டுக்களுக்குப் பிடித்த அபிநயமும், பார்த்தோரின் மனதைக் கவர்ந்தது.

28உ பாடிய வி. வி. சடகோபனின் சங்கீதம் வனப்பாயிருந்தது. கனிப்பான சாரீர சம்பத்தும், நாமக்கல் சேஷய்யங்காரின் உயர்ந்த சிட்சையும், இடைவிடா உழைப்பும் சேர்ந்து, 'அரியக்குடி பாணியாய்க் கேட்கிறதே' என்று கேட்டோரெல்லாம் கொண்டாடும் அவரது பாணியழகு, அன்று தோடி, அடாணா, ஆனந்த பைரவி ராகங்களில் நன்கு பிரதிபலித்தது. 'துஜக தம்பா' 'சுவாகு' கிருதிகளில் பொழிந்த நிர

வல் ஸ்வரப்ரஸ்தாரங்கள் பிருவா யிருந்தன. வெங்கடராம சாஸ்திரியின் வயலினும், கல்பாத்தி ராமனாதனின் மிருதங்கமும் பக்க வாத்யங்களா யமைந்து கச்சேரியை ஜோர் படுத்தின.

29உ சாக்ஷாத் அரியக்குடி ராமானுஜய்யங்காரே பாடினார். அன்று யௌவன வயது 'அரியக்குடி'யாகவே, கச்சேரியைப் பெரும்பாலும், மத்யம கால அச்வ நடையிலேயே ஜமாய்த்தார். அன்றைய ஆனந்த பைரவி, உண்மையில் ஆனந்தமாகவே இழைந்துலாவியது. அஸாவேரி, கரஹரப்ரியா, காம்போதி ராகங்களையும் ரஸிகர வடிவங்களாய்ச் சித்திரித்தார். 'மாஜானகி'. 'த்ஸக்கனிராஜ' என்ற பழம் பெரும் உருப்படிகளை அவர் திருப்பியதும் அன்று விசேஷம். வயலின் வாசித்தவர் சௌடய்யா, மிருதங்கம் வாசித்தவர் நாகர்கோவில் கணேசன் என்று சொல்லும்போதே, கச்சேரி எவ்வளவு சிறப்பாய் அமைந்தது என்று கூறத் தேவையில்லை.

30உ தண்டபாணி தேசிகரின் கடைசிக் கச்சேரியுடன் உத்ஸவம் இனிது முடிந்தது. சரீரத்துக் கேற்ற கன சாரீரம் படைத்தவர் தேசிகர். எல்லாவற்றையும் அவருக்கு இயல்பான பாவப் பொலிவுடன் பாடினார். கல்யாணி, மோஹனம் இவையோடு, அவருக்கு மிகவும் பிரியமான ரதிபதிப்ரியா ராகத்தையும் வழங்கினார். கமாஸ், மோஹனம் உருப்படிகளில், ஸ்வரப்ரஸ்தாரங்களைச் சரமாரியாய் நீண்ட நேரம் பொழிந்தார். திருவாளொளிப்புத்தூர் கிருஷ்ணமூர்த்தியின் வயலின், நடராஜசுந்தரத்தின் மிருதங்கம், வில்வாத்திரி அய்யரின் கடம் எல்லாம் சேர்ந்து, கச்சேரியைக் கலகலக்கச் செய்தன.

ஒவ்வொரு நாளும் கைங்கரியம் செய்த வித்வான்களுக்கு வந்தனோபசாரம் செய்த வைத்யனாத பாகவதரின் மூன்றாவது குமாரர் ராதாகிருஷ்ணனின் பேச்சுக்களும், நகைச்சுவை நிறைந்த கச்சேரித் துணுக்குகளாகவே யிருந்தன.

இவ்வாறு ஒத்துழைத்து உற்சவத்தைச் சிறப்பித்த கலைவாணர்களுக்கும், ரஸிகர்களுக்கும், தமிழ்நாடு கடமைப்பட்டிருக்கிறது. இவ் விழாவின் மூலமாயும், வேறு நன்கொடைகளாலும் சேர்க்கப்படும் நிதியைக் கொண்டு, ஆலமங்கலம் வைத்தியநாத பாகவதர் பேரில், ஒரு குருகுலம் ஸ்தாபித்து, உயர்ந்த முறையில் கலைகளை வளர்க்க வேண்டியது அவசியம். எல்லாவற்றிற்கும் மேலாக, அப் பெரியார் வெகு காலமாய் நடத்தி வந்த, பாகவத நாடகமேளம் என்ற தமிழ்நாட்டு நாட்டிய நாடகக் கலையை, அழியாமல், மேன்மேலும் போஷித்து, இக்கால நாகரிகத்திற்கேற்ப அழகு படுத்தி, பிராபல்யமடையச் செய்ய வேண்டியது ரொம்பவும் அத்யாவசியமாகும்.

# புதுக் குடை மர்மம்

**வி. என்.**

சென்னையில் கொஞ்ச நாளைக்கு முன் இரண்டு வாரமாக இடைவிடாமல் மழை பெய்தது ஞாபகம் இருக்கிறதா? அப்பொழுதுதான் மாதக்கணக்காக வெளியே எடுக்காமல் வைத்திருந்த என்னுடைய குடையை ஆபீசுக்கு எடுத்துக் கொண்டு போகும் நிர்ப்பந்தம் அடியேனுக்கு ஏற்பட்டது.

ஆபீஸ் வாசலை அடைந்ததும் குடையை எவ்வளவோ சிரமப்பட்டும் மூட முடியாமல் போய்விட்டது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆபீஸ் பியூன் பொன்னுசாமி, "என்ன ஸார், குடை மூட வல்லீங்களா? புது மாடலா யிருக்குதுங்களே!" என்று ஏளனம் செய்து கொண்டே என் கையிலிருந்த குடையை வாங்கி, 'சடக்' கென்று மூடினான். அதன் பலன் என்னவென்றால், ஏற்கெனவே கொஞ்சம் வளைந்திருந்த இரண்டு கம்பிகள், கூண்டிலிருந்து விடுபட்ட பறவைகளைப்போல் குடைத் துணியைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்தன. ஆபீஸ் வராந்தாவில் நின்றபடி இதைக் கவனித்துக் கொண்டிருந்த குமாஸ்தா குப்புசாமி ஐயர், "என்ன மிஸ்டர், வெங்கடேஸ்! இந்தக் குடையை எங்கே ஸார் வாங்கினீர்கள்? மூடினால் திறக்கமாட்டேன் என்கிறது; திறந்தால் மூடமாட்டேன் என்கிறதே!" என்றார்.

இதற்கு மேலும் சும்மா இருந்தால் மற்றவர்களும் சேர்ந்துகொண்டு என் மானத்தை வாங்கிவிடுவார்கள் போலிருந்தது. உடனே நான் குப்புசாமி ஐயரைக் கோபமாக முறைத்துப் பார்த்து, "உமக்கென்ன ஐயா, எல்லாம் ஏளனமாகத்தா னிருக்கிறது! எங்கள் வீட்டில் குடியிருப்பவர் ஒருவருடைய குடையை அவர் ஊரில் இல்லாத சமயத்தில் சும்மா இருக்கிறதே என்று நினைத்து ஆபீசுக்கு எடுத்துக்கொண்டு வந்தால் இரண்டு கம்பிகள் முறிந்துவிட்டன. அதைப் பழையபடி சரிப்படுத்திக் கொடுக்க வேண்டுமே என்ற கவலை எனக்கு. உமக்கானால் இது தமாஷாக இருக்கிறது!" என்று போட்டேன் ஒரு போடு.

பக்கத்தில் நின்று கொண்டிருந்த பரமேஸ்வரன் பிள்ளை, குப்புசாமி அய்யரைப் பார்த்து, "என் ஸார், உங்களுக்கு எந்தச் சமயத்திலும் விளையாட்டுத்தானா?" என்று கண்டித்து விட்டு, என்னிடம் ஒடிந்து போன குடைக்காக அநுதாபம் விசாரித்தார். நானும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டேன்.

ஆனால் உண்மை யென்னவோ குடை என்னுடையதுதான். அதை வெளியில் சொல்லுவதற்கு வெட்கம். அதற்காகத் தயாரித்த கதை இயற்கையாக எல்லோருடைய அநுதாபத்தையும் கவர்ந்து விட்டது.

உடனே பியூன் பொன்னுசாமியைக் கூப்பிட்டுத் தெருக் கோடியிலிருக்கும் குடை ரிப்பேர் செய்பவனிடம் கொண்டு போய் ஒடிந்து போன இரண்டு கம்பிகளுக்குப் பதிலாகப் புதுக் கம்பிகள் போட்டுக் கொண்டு வரும்படி சொன்னேன். அரை மணி நேரத்திற்கெல்லாம் குடையும் ரிப்பேராகி வந்தது. ஆனாலும், எந்த நிமிஷத்தில் எந்தக் கம்பி ஒடிந்துவிடுமோ அல்லது கைப்பிடி கழன்று விடுமோ என்ற பீதி என்னை விட்டு அகலவில்லை.

சரியாக மணி இரண்டு அடித்தது. விட்டிருந்த மழையும் பழையபடி பிடித்துக் கொண்டது. டிபனுக்கு ஆபீஸை விட்டு வெளியே போவதற்குக் குடையில்லாமல் அநேகரால் முடியவில்லை. ஆபீஸிலிருந்த ஐம்பது பேரில் நானும் எதிர் 'வீட்'டில் இருந்த எதிராஜூம்தான் குடைகள் கொண்டு வந்திருந்தோம். பாக்கி யுள்ளவர்களில் பாதிப் பேருக்குச் சொந்தத்தில் குடையும் கிடையாது; குடை எப்பொழுதாவது வாங்க வேண்டுமே என்ற எண்ணமும் கிடையாது! ஆகவே, ஆபீஸிலிருந்து அரை பர்லாங்கு தூரத்திலிருந்த ஓட்டலுக்குப் போய் வருவதற்கு என்னுடைய குடையை இரவல் கேட்க வந்தார்கள் பலர். நானும் அவர்களிடம் கண்டிப்பாக ஐயத்திரிபுக்கு இடமின்றி, "நீங்கள் இந்தக் குடையை எடுத்துக் கொண்டு போவதில் எனக்கு யாதொரு ஆட்சேபணையுமில்லை. ஆனால் அதற்குப் பழுது நேர்ந்தால் எடுத்துக் கொண்டு போகிறவர்கள் தங்கள் சொந்தச் செலவில் அதைச் சரிப்படுத்திக் கொடுத்துவிட வேண்டும்" என்றேன்.

"இதெல்லாம் எங்களுக்குத் தெரியாதா, ஸார்!" என்றார் டைபிஸ்ட் தியாகராஜன்.

"என்ன இருந்தாலும் இந்த மாதிரி விஷயங்களில் முன்னெச்சரிக்கையாக இருப்பதில் தப்பிதம் ஒன்றுமில்லையல்லவா?" என்றேன் நான் மறுபடியும்.

சர்ச்சை முடிந்ததும் இரண்டு இரண்டு பேர்களாக ஹோட்டலுக்குப் போய் வந்து கொண்டிருந்தார்கள். ஆனால், அன்று சாயந்திரத்திற்குள் குடையிலுள்ள கம்பிகளில் பாதிக்கு மேல் பலருடைய உபயத்தின் பேரில் புதுப்பிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதாக அடுத்த நாள் பொன்னுசாமியிடமிருந்து தெரிந்து கொண்டேன்.

அன்று முதல் வழக்கமாகக் குடையைப் பிற்பகல் வேளையில் மற்றவர்கள் எடுத்துக் கொண்டு போவது சகஜமாகி விட்டது. குடையும் தன்னைச் சுமந்து கொண்டு போகிற ஒவ்வொருவருக்கும் பாரபட்சமில்லாமல் ஏதாவது செலவு வைத்துக் கொண்டேயிருந்தது. இப்படியாக இரண்டு மூன்று நாட்களுக்குள் என்னுடைய குடையிலுள்ள கம்பிகளனைத்தும் புதிதாகப் போடப்பட்டு விட்டன. ஏன், கைப்பிடி கூட மாற்றப் பட்டிருந்தது!

அடுத்த நாள் சனிக்கிழமை. வீட்டை விட்டுப் புறப்படும்பொழுதே வானம் மப்பும் மந்தாரமுமா யிருந்தது. ஆபீஸை அடைந்ததும் மழையுடன் புயலும் சேர்ந்து அடிக்க ஆரம்பித்தது. அப்பொழுது தான் அக்கௌண்டெண்ட் அற்புதசாமி அவசரம் அவசரமாக வெளியே கிளம்புவதற்குக் குடை யில்லாமல் தவித்துக் கொண்டிருந்தார். நான் வந்ததும் வராததுமாகப் பியூனை விட்டு என்னிடமிருந்த குடையை வாங்கிக் கொண்டு வரச் சொன்னார். நானும் வழக்கம் போல் முன்னெச்சரிக்கையாக, "பொன்னுசாமி! உனக்குத்தான் தெரியுமே! அக்கௌண்டெண்ட் ஐயாவிடம் குடையை ஜாக்கிரதையாகக் கொண்டு போய்விட்டு வரச் சொல்!" என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே, அற்புதசாமி நாங்கள் இருந்த இடத்திற்கு வந்து, "என்ன, மிஸ்டர்! குடையைப் பத்திரமாகக் கொண்டு வந்து விடுகிறேன்!" என்று குடையை வாங்கிப் பிரித்த வண்ணம் வெளியே கிளம்பினார்.

அவர் எங்கள் ஆபீஸ் இருக்கும் தெருக் கோடியைத் தாண்டுவதற்கு முன், மழையும் சுழற் காற்றும் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக் கொண்டு பலமாக அடிக்கவே, தன்னையும் அறியாமல் குடையை நழுவ விட்டுவிட்டார். 'என்ன நடந்தது?' என்று அற்புதசாமி அறிந்து



...குடை புது மாடலா யிருக்குதுங்களே!

கொள்ளுமுன் குடைத் துணி தலைகீழாகத் திரும்பி, கம்பிகள் எல்லாம் சிதறுண்டு, தெருக் கோடியிலிருக்கும் சாக்கடையில் விழுந்து, மழை ஜலத்தினால் கண்ணுக்கெட்டாத தூரம்வரை அடித்துக் கொண்டு போய்விட்டது. பாவம், அக்கௌண்டெண்ட் சொட்டச் சொட்ட நனைந்தபடி ஆபீஸுக்குத் திரும்பி வந்தார்.

அவரைப் பார்த்தவுடனே என் மனம் பகீர் என்றது. ஊரார் செலவில் புத்துயிர் பெற்ற என்னுடைய குடை என்னை விட்டுப் போய்விட்டது பற்றி எனக்கு உண்டான வருத்தம் சொல்லி முடியாது.

அடுத்த மூன்று நாட்கள் வரை ஆபீஸிலுள்ள அனைவரும் எதிராஜுலுவின் ஒரே குடையை நம்பி வெளியில் போவதும் வருவதுமாக இருந்தனர்.

இப்படியும் அப்படியுமாக ஒரு வாரம் கழிந்தது. ஒரு நாள் ஆபீஸை விட்டுப் புறப்படும் பொழுது பியூன், "உங்களை அக்கௌண்டண்ட் கூப்பிடுகிறார்!" என்றான்.

நான் அற்புதசாமியின் அறைக்குப் போனதும், அவர் தமது மேஜைமேல் வைத்திருந்த புதுக்குடை ஒன்றை எடுத்து என்னிடம் கொடுத்து, "யாரிடமிருந்து பழைய குடையை வாங்கிக் கொண்டு வந்தீரோ, அவரிடம் கொடுத்து விடும்!" என்றார்.

நான் முதலில் சங்கோசப் படுவதுபோல் பாவனை செய்தேன். "பாதகமில்லை; எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றார் அற்புதசாமி.

நானும் என் சந்தோஷத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் குடையை வீட்டிற்குக் கொண்டுவந்து சேர்த்தேன்

அடுத்த நாள் முதல் நான் புதுக் குடையை ஆபீஸுக்குக் கொண்டு போவதை அடியோடு நிறுத்தி விட்டேன். காரணம் இன்னதென்று சொல்லவா வேண்டும்?

# வட்ட மேஜை

மயிலாப்பூர்
24—10—46

ஆசிரியர் அவர்களுக்கு,

'வருஷத்துக்கு ஒரு நாள்' வரும் தீபாவளி சென்ற வருஷம் நிறைவு பெறாமல் இருந்து இந்த வருஷம் தமிழர் செய்த 'பூஜாபல'த்தினால் தீபாவளி மலர் வந்து, எங்கள் 'குறையும் தீர்ந்தது.' 'தமிழ்நாட்டு அஜந்தா'வைப் பார்ப்பதற்குச் சித்தன்ன வாசல் வரைக்கும் போகும் தொந்தரவை நமக்கு வைக்கவில்லை, கலை மன்னர்களான 'மணியம்,' 'சந்திரா' முதலானோர். 'ரவீந்திரரின் சொற்சித்திரங்'களுக்கு அமைந்திருக்கும் ராகவனின் பொற்சித்திரங்கள் ரொம்ப ரொம்ப ஜோர்! 'வர்மா'வின் கம்ப சித்திரம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்துவிடுகிறது. பொதுவாக எல்லாச் சித்திரங்களையும் 'மணிகள்' என்று சொல்வது மிகையல்ல. 'இந்த வருஷத்துப் பிரமுகர்கள்' ஒரு சிறந்த அம்சம். தேசத் தலைவர்களுக்கு அடுத்தபடியாக.

'அமர வாழ்வின்' மூலம் நேதாஜியைக் குறித்து ஒரு புது நம்பிக்கை உண்டாகிறது. 'மெய்ப் பொருள்' உணர்ந்தவர்களுக்கு நேதாஜியின் 'அமர வாழ்'வில் சந்தேகம் இருக்கவே முடியாது.

'இந்த வருஷத்துப் பிரமுகர்'களுள் ஒருவரான 'வாத்தியார் வாஞ்சி'யின் மூலம் 'தனிவன்' ஒரு உருக்கமான சித்திரத்தை வரைந்து தந்திருக்கிறார். 'நடந்த கதை' 'விந்த'னின் மற்றுமொரு சிரஞ்சீவிக் கதை. ஸ்ரீநாம் குருஸ்வாமியும், 'சோமு'வும் சர்வ சாதாரணமான விஷயங்களைக் கொண்டு சிறந்த கதைகளை நிர்மாணித்திருக்கிறார்கள். ரா. கி.யும் 'சுந்தா'வும் ஹாஸ்ய ரஸத்தை அள்ளிக் கொடுத்திருக்கிறார்கள். சோமாஸும், பகீரதனும் 'ஆபத் சகாய'மாக விளங்குகிறார்கள், இந்த அம்சத்தில்.

கவிதை அம்சத்தில் ரவீந்திரர், பாரதியார், கம்பர், நாமக்கல் கவிஞர் ஆகியோர் கொடுத்து வைத்தவர்கள்.

இந்த அற்புதமான தீபாவளிப் பொன்மலரை அளித்ததற்காகத் தங்களுக்கு என் மனமார்ந்த வந்தனம்.

வி. எஸ். சுந்தரராஜன்.

பாளையங்கோட்டை
24—10—46

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

நமஸ்காரம். தீபாவளிக்கு முதல் நாள் இரவு உள்ளத்திலுள்ள உற்சாகத்தையெல்லாம் ரேஷன் கடைகளில் காலியாக்கிவிட்டு, சுமார் பத்து மணிக்கு வீடு திரும்பியபோது 'கல்கி' தீபாவளி மலர் என் கையில் கிடைத்தது. சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தேன். 'ஆனந்த நடனமே' ஆடிவிட்டேன். 'மெய்ப் பொரு'ளையே கண்டுவிட்டது போன்ற ஓர் உணர்ச்சி! உடல் அலுப்பினால் உறக்கம் வரும்போலிருந்தது. "ஏ, உறக்கமே! நான் மலர் படித்து முடிக்கும் வரை 'நீ எங்கே! நான் எங்கே!'" என்று சொல்லிவிட்டு 'பரம பாகவதரின்' பக்தி சிரத்தையுடன் படிக்க ஆரம்பித்தேன்.

பிரஹதீஸ்வரர் கோவிலுக்குள் நுழைந்து வெளி வந்து வெகு நேரமாகியும் என் பிரமிப்பு அடங்கவில்லை. அப்போது 'திரிபுர ஸம்ஹாரத்'திற்குக் கிளம்பிய த்ரிநேத்திரர் போல என் ஸஹதர்மிணி முன்னால் வந்து நின்றாள். நான் அவளுக்குத் தெரியாமல் மலரை மறைத்து மறைந்துப் படித்ததை அவள் பார்த்துவிட்டதுதான் அவள் கோபத்திற்குக் காரணம். ஐந்து நிமிஷத்தில் அவள் கையில் கொடுப்பதாய்ச் சமாதானப் படுத்தியும், "கொய்யா மலரால் மலர் கொய்துறுவாள்" போல நின்றாள் அவள்.

'வருஷத்திற்கு ஒரு நாளா'கிய தீபாவளி புண்ய தினத்தில் எல்லையற்ற இன்பத்தைக் கொடுக்கக்கூடிய மலரைப் பார்ப்பதற்கும் படிப்பதற்கும் பூர்வஜன்ம 'பூஜா பலன்'தான் காரணம். என்றென்றைக்கும் மலர் படித்தின்புற நமக்கு 'அமர வாழ்வு' தேவை!

கடிகாரத்தில் ஒரு 'மணி' அடிப்பது காதில் விழுகிறது. இப்போதுதான் 'தமிழ் நாட்டு அஜந்தா'விற்குள் இருந்து வெளியே வந்தேன்.

கிட்டாத இலக்கிய விருந்தான இந்த மலரைப் பார்த்து எவ்வளவோ 'குறை தீர்ந்தது!' ஒவ்வொரு வருஷமும் தமிழ்நாட்டு ரசிகர்களுக்கு இந்த விருந்தை விதவிதமான அபிவிருத்திகளுடன் அளிப்பது தங்கள் கடமை. அதை அனுபவிப்பது எங்கள் பாக்கியம்.

நமஸ்காரம்,

ஆர். எஸ். ஸ்வாமிநாதன்.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

நாங்கள் பட்டாளத்திலிருந்து திரும்பிய மாஜி பட்டாளத்தார்கள். எங்களுக்கு வேலை கொடுப்பதற்கு சர்க்கார் மிகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால், இதுவரையில் ஒன்றும் நடக்கவில்லை. எக்ஸ்சேஞ்சு ஆபீஸிலோ லஞ்சப் பேய் தாண்டவமாடுகிறது. லஞ்சம் கொடுப்பவர்களுக்கு வெகு சீக்கிரம் வேலை தரப்படுகிறது. நாங்கள் திரும்பி வந்து ஒன்பது மாதம் ஆகிறது. இதுவரை எங்களுக்கு வேலை தரவில்லை. சிலர் R. I. N. ஸ்டிரைக்கில் சேர்ந்திருந்தவர்கள். அவர்களுக்கு வேலை தருவதில்லை. தந்தாலும் வேலை செய்யுமிடத்துக்குப் போனால் அவர்களை 'வேண்டாம்' என்று சொல்லுகிறார்கள். அவர்கள் எங்கே போவார்கள்? ஆகையால் நமது பொதுஜன சர்க்கார் R. I. N. ஸ்டிரைக்கில் சேர்ந்திருந்தவர்களுக்கும் மற்ற எல்லாருக்கும் வரிசைப் பிரகாரம் வேலை கொடுக்கும்படி ஏற்பாடு செய்யக் கோருகிறோம்.

ஜெ. ஐசாக்; கே. சுப்ரமணியன்;
ஆர். வெங்கிடேசன்; எஸ். சாமிநாதன்;
எம். அல்லாபாஷா; டி. வேலப்பன்;
ஜி. ஐயப்பன்.

தாராபுரம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

தாங்கள் கல்வி நிலைமையைப் பற்றியும் ஆசிரியர்கள் நிலைமையைப் பற்றியும் என்னவெல்லாமோ எழுதிப் பார்த்தீர்கள். ஆசிரியர்கள் படையெடுத்துப் போய்ப் பிரதம

மந்திரியாரையும், கல்வி மந்திரியாரையும் சந்தித்துப் பேசிய விஷயங்களை யெல்லாம் படத்துடன் விளக்கியிருந்தீர்கள். ஆசிரியர்கள் படும் கஷ்டநஷ்டங்களைப் பற்றிப் பாட்டுகளும் வெளியிட்டீர்கள். நாங்களும் ஊர் ஊராகக் கூட்டங்கள் போட்டு எங்கள் குறைகளைப் பற்றிப் பொது ஜனங்களுக்கு உணர்த்தி எங்கள் தேவைகளைப் பற்றி மந்திரிமாருக்கு விண்ணப்பித்தோம். என்ன செய்தும் யாது பலன்? எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காய் முடிந்தது.

தங்கள் பத்திரிகையில் வெளியானவற்றை யெல்லாம் படித்தபோது இனி விமோசனம் பிறக்கும், பிறக்கும் என்று எதிர்பார்த்து இலவு காத்த கிளிபோல் ஆனோம். நமது மந்திரிகள் பதவியேற்று ஆறு மாதமாகியும் கல்விக்காக உருப்படியாய் என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்? மற்ற நாடுகளில் நூற்றுக்கு எண்பது பேர், தொண்ணூறு பேர் வாசித்தவர்களிருக்க, நம் நாட்டில் நூற்றுக்குப் பத்துப்பேர் கூட வாசித்தவர்கள் இல்லையே!

ஏன் சென்னை மாகாணத்தில் கட்டாயக் கல்வியை அமுலுக்குக் கொண்டு வரக் கூடாது? இந்தக் கதர்த் திட்டத்தைப் பள்ளிக்கூடங்களில் வகையோடு இணைக்கப் படாதா? இப்பொழுதும் ஆரம்பப் பாடசாலைகளில் கைத்தொழில்கள் கற்பிக்கப்படுகின்றன. என்ன மாதிரி தொழில்கள் தெரியுமா? காகிதக் கப்பல், களி மண்ணால் வெல்லக்க, பனை யோலையால் கிலுகிலுப்பை செய்தல் முதலியன!

இதுவா பிற்கால வாழ்க்கைக்கு உதவக் கூடியது? இந்த லட்சணத்தில் இன்ஸ்பெக்டர்கள் "என்ன கைவேலை சொல்லிக் கொடுத்திருக்கிறது? ஏன் தோட்டம் போட வில்லை?" என்று மிரட்டுகிறார்கள். கைப் பயிற்சி போதிக்க முதலில் உபாத்திமார்களுக்குப் பயிற்சியளிக்கப் பட்டிருக்கிறதா? ஒன்றிரண்டு உபாத்திமார்கள் ஏதோ நூல் நூற்க, பாய் பின்ன, கூடை முடைய, காகிதப் பூ வேலை செய்யத் தெரிந்தவர்களாயிருந்தாலும் அதைப் போதிப்பதற்கு வேண்டிய உபகரணங்கள் யார் கொடுக்கிறார்கள்? உபாத்திமார் சம்பளம் குடும்பத்துக்கே போதாமல் இருக்கும்போது தங்கள் சம்பளத்திலிருந்தே இவைகளெல்லாம் வாங்கிக் கொள்ள முடியுமா? இப்படிப்பட்ட நிலைமையில் இன்ஸ்பெக்டர்கள் மிரட்டுவது எப்படியிருக்கிறது என்றால், குடித்தனக்காரன் உப்பு, புளி, மிளகாய், விறகு, எண்ணெய் ஒன்றும் வாங்கிப் போடாமல், "சமையல் ஏன் நன்றாயில்லை? வடை, பாயசம் ஏன் செய்யவில்லை?" என்று மனைவியை மிரட்டுவதுபோல் இல்லையா?

கனம் கல்வி மந்திரியார் இதுவரை எத்தனை ஆரம்பப் பாடசாலைகளைப் பார்வையிட்டிருக்கிறார்? வயிற்றுக்கு உணவில்லாமல், தலையில் எண்ணெய் இல்லாமல் பள்ளியில் நிறைந்திருக்கும் ஏழைக் குழந்தைகளைப் பார்வையிட்டிருக்கிறாரா? அவர்களுக்கு ஒருவேளை போஜனமும், உடையும், புத்தகமும் கொடுக்க ஏற்பாடு செய்யக்கூடாதா?

இவ்வளவு நாட்கள் நாம் மாற்றாந்தாயால் மண்டை யடிபட்டு வந்தோம். இப்பொழுது சொந்தத் தாயின் கைக் குழந்தைகளாயின் எமது தேவைகளுக்கு வாதாட உரிமையில்லையா? மந்திரிமார் எந்தத் தேதியிலிருந்து தங்கள் சம்பளத்தை உயர்த்திக்கொண்டார்களோ, அந்தத் தேதியிலிருந்து எங்களுக்கும் சம்பளம் உயர்த்திக் கொடுக்க ஈசன் கருணை காட்டாரா? இன்னும் பார்க்கிறோம்.

என். வடிவேலு.

[ஈசன் நிச்சயம் கருணை காட்டுவார். ஆனால் மந்திரிகளைப் பற்றி நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. மிரட்டி உருட்டுகிறவர்களுக்குத்தான் இது காலமாயிருக்கிறது. ஏதோ உங்களால் ஆனதைப் பாருங்கள்.

—ஆசிரியர்.]

ஊத்துக்குளி
14—10—46

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

தங்கள் 13-10-46ம் தேதி இதழில் வட்டமேஜையின் தலைப்பின் கீழ் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்களுடைய கடிதம் வெளியிடப்பட்டுள்ளது.

அதில் டாக்டர் ராஜன் அவர்கள் கிராம தேவதைகளுக்குப் பிரார்த்தனைக்காக எருமைக் கடாக்களைப் பலியிடும் வழக்கத்தால் விவசாயத்திற்குப் பாதகம் ஏற்படுகிறது என்று குறிப்பிட்டுள்ளார்.

ஐயா! பலியிடும் வழக்கத்தால் விவசாயம் மாத்திரம் பாதிக்கப் படுவதில்லை. இதனால் இந்து மதத்தின் மானமே போகிறது. மேனாட்டு மங்கை மேயோ இவ்வழக்கத்தைக் குறிப்பிட்டு இந்திய மக்களையே குறை கூறி யிருக்கிறாள்.

டாக்டர் ராஜன் அவர்கள் பண்பட்ட பண்ணைக்காரர்; ஆகையால் விவசாயம் பாதகமடைவதை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார் என்று எண்ணுகிறேன்.

அஹிம்சை தோன்றிய நாடு நமது நாடு. இன்றும் அஹிம்சையைக் கடைப்பிடிப்பதும் நம் நாடுதான். இத்தகைய நாட்டில் கடவுளின் பேரால் பலியிடும் வழக்கம் இருக்குமானால் அது வெட்கப்பட வேண்டிய விஷயமாகும்.

இன்று இந்நாட்டில் அஹிம்சா மூர்த்தியான காந்திஜியின் ஆட்சி நடைபெறுகிறது. கோவில்களின் முன் ஆடு, கோழி, எருமை, பன்றி, மாடு பலியிடுதலைச் சட்டத்தின் மூலம் ஒழித்துச் சென்னை மந்திரி சபை மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்ட வேண்டும்.

மோ. கை. செல்லியப்பன்.

# ஓர் அழகிய நங்கை...

லலிதா! உன்னதி படைத்தவரும் பெர் லெவல் காரியதரிசி யாகா அதிகாரியாகிய, தென்னிந்தியாவிலிருந்து முன்னா ஓர் இளைஞரின் மனைவியாகிய இவ்வழகுசுந்தரி, தனது எழிலைப் பாதுகாக்க, ஆயிரக் கணக்கான மற்ற பெண்மணிகளைப் போல புதிய முறையாகிய பாண்ட்ஸைக் கையாண்டு வருகிறாள்.



கணவனுக்கும் இளமைந்தனுக்கும் லலிதாமீது அளவு கடந்த ப்ரேமை!

....தன் வீட்டிலுள்ள எல்லோருந்தான் அவளை உயிருக்குயிராக நேசிக்கிறார்கள்! ஏனெனில் லலிதா தன் யௌவனம் நிரம்பிய இயற்கை அழகை பாண்ட்ஸால் காப்பாற்றி வருகிறாள். தினம் காலை, மாலைகளில், அவள் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் முகத்திற் பூசி, சொற்பநேரங்கழித்து அதை மெதுவாகத் துடைத்துக் கழிக்கிறாள். தூசும், அழுக்குமெல்லாம் அத்துடனேயே வந்து விடுகிறது! பின்பு பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவுகிறாள். அது சருமத்தினுட்சென்று, உலர்ந்துபோன இயற்கைத் தைலங்களை சருமத்திற்குத் திருப்பியளிக்கிறது. வதனம் பூவிதழ் போன்று மோகனகாந்தியுடன் விளங்குகிறது.....பகல் பூராவும்....மாலை பூராவும்!



"அம்மா, உன் முகம் எவ்வளவு மழமழப்பாக இருக்கிறது!"




பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் — தினம் காலை, மாலைகளில் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் முகத்தைச் சுத்தம் செய்யுங்கள் — சோப்பு வேண்டாம். ஒரு இரண்டு வாரத்தில் முகசருமம் சேர்த்தி மிக வாய்க்கும்.




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் — கோல்ட் க்ரீமைத் துடைத்து எடுத்ததும், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தாராளமாய்ப் பூசிக்கொள்ளுங்கள். அது உலர்ந்துபோன இயற்கைத் தைலங்களை சருமத்திற்குத் திருப்பி அளித்து, வதனத்தை மிருதுவும், பளபளப்புமாக்கிறது. அது கண்ணுக்குப் புலப்படவும் செய்யாது.



பாண்ட்ஸ் பவுடர் — பின்பு வேண்டுமானால், பாண்ட்ஸ் பவுடர் பூசிக்கொள்ளுங்கள் — உங்கள் முகசருமத்துக்கேற்ற வர்ணமாகத் தெரிந்தெடுத்து. அது முகத்திற்கு ரோஜா விதழ் போன்ற ஓர் மோகன காந்தி அளிக்க உதவும்.




வியாபார விவரங்களுக்கு இவ்விலாசத்திற்கு எழுதவும்: எல். டி. ஜெய்யூர் & கோ., (இந்தியா) லிட்., பம்பாய் - கல்கத்தா - கராச்சி - சென்னை.



# காதலும் கலியாணமும்

பூ. பாலகிருஷ்ணன்

ராணுவப் பென்ஷனை வாங்குவதற்காக நான் 'ட்ரெஷரி' ஆபீஸில் வந்து காத்துக் கொண்டிருந்தேன். என்னைப் போலவே பலர் அங்கு வந்து காத்திருந்தனர். என் பெயர் லிஸ்டில் வரும் வழியைக் காணோம். பொழுது போவதற்காக எதாவது பேச்சுக் கொடுக்கலாம் என்று எண்ணி அருகிலிருந்த இன்னொருவன் பக்கம் திரும்பினேன்.

அவனுக்கு வயது சுமார் இருபத்தைந்து தானிருக்கும். எதாவது குண்டுக் காயம் பட்டு அதற்காகப் பென்ஷன் வாங்க வந்திருக்கிறானோ என்று அவனை உற்றுக் கவனித்தேன். ஆள் கொழுக்கட்டைபோல் ஆஜானுபாகுவாய் இருந்தான். பின் எப்படி இவனுக்குப் பென்ஷன் கிடைத்தது?

"உன் பெயர் என்ன, அப்பா?" என்று கேட்டேன்.

"கருப்பையா" என்று கச்சிதமாக அவன் பதில் சொன்னான்.

"பென்ஷன் வாங்கவா வந்திருக்கிறாய்?"

"ஆமாங்க!"

"உனக்கு சர்விஸ் அவ்வளவு அதிகம் இருக்காதே, எப்படிப் பென்ஷன் கிடைக்கிறது?"

"எனக்குப் பைத்தியமுங்க!" என்றான்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்ன, உனக்குப் பென்ஷன் கொடுக்கிறவர்களுக்குப் பைத்தியமா, அல்லது நீயே பைத்தியக்காரன்தானா?" என்று வியப்புடன் கேட்டேன்.

"அது பெரிய ராமாயணம். வேணும்னுப் பூராவும் உங்களுக்குச் சொல்றேன். பொழுது போவணுமில்லே!" என்றான்.

"சரி, சொல்லு. கேட்கிறேன்" என்றேன்.

அவன் ஆரம்பித்தான்:—

* * *

"நான் பட்டாளத்திலே சேர்ந்ததே ஒரு கதைதான்—அப்பாருக்கும் எனக்கும்

சண்டை வந்திடிச்சி. நான் முருகாயியைத் தான் கட்டுவேன்னு பிடிவாதம் பிடிச்சேன். அப்பன் கருப்பாயியைத்தான் கட்டணும்னான். "தலை போனாலும் கருப்பாயியைக் கட்டமாட்டேன். இதனாலே ஒன் வூட்டை விட்டே ஓடினாலும் பரவாயில்லே"ன்னு நெனச்சிக்கிட்டேன். வாயைத் திறந்து சொல்லியிருந்தேனா, அந்த எடத்திலேயே என்னை வெட்டிப் போட்டிருப்பான், அப்பன்!

அன்னிக்கி ராவுக்கே வூட்டை விட்டு ஓடிட்டேன். இன்னம் ஒரு நாள் அங்கே இருந்திருந்தாலும் கருப்பாயியை என் கழுத்திலே கட்டி விட்டிருப்பான் அப்பன்.

ஓடி ஓடி மறுநாக் காத்தாலே பாளயங் கோட்டைக்கு வந்தேன். அங்கே பட்டாளத்துக்கு 'பிட்' பண்ற ஆபீசு இருக்குதுங்களே, அங்கே போய்க் குந்திட்டேன். கடைசிலே அங்கேயிருந்த ஆபீசரு என்னைப் பார்த்து, "அடே, ஒன்னை 'சிப்பாா' 'பிட்' பண்ணறேண்டா!"ன்னு சொன்னான்.

"சிப்பரோ, கீப்பரோ எதாவது ஒண்ணிலே 'பிட்' பண்ணப்பா, போறும்!" என்றேன்.

"என்ன, சிப்பாா?" என்று நான் நடுவில் கேட்டேன்.

"ஆமாங்க, அது தான் 'கேம்'புங்களிலே பெருக்கிக் கிருக்கிச் சுத்தம் செய்யற வேலே! எனக்கு அப்போ 'சிப்பர்'னு என்னான்னே தெரியாது. நம்ம சாதியைப் பத்திக் கேட்டுக் கிடாதீங்க. எல்லாம் ஒசந்த சாதிதான். ஆனா நான் தான் அப்பன்கிட்ட மறைச்சுக்கிட்டு 'பிட்'டாக வந்துட்டேனே! சிப்பர்னு என்னடான்னு, அது என்ன வேலேன்னு ஒத்தனைக் கேக்கலே. நான் பாட்லே 'பிட்'டாயிட்டேன். அன்னிக்கிச் சாயந்திர வண்டியிலே எங்களை எல்லாம் ஏத்திப்பிட்டான்.

சண்டை எப்படியிருக்கும்னே எனக்குத் தெரியாது! நான் போன இடமெல்லாம் செர்மன் ஒட்டுட்டு ஓடிப் போயிட்டான். அவன் போன அப்புறந்தான் நாங்க போவோம். அப்போ சண்டை எங்கிருந்து பாக்கறதுங்க? எனக்கும் சண்டை போட ஆசைதான். யாராவது நாலு பேர் மண்டையையாவது ஒடைக்கலாம்னுதான் ஆசையாயிருந்தேன். ஆனா சண்டையையே பார்க்க முடியலியே!

இப்படியே இதாலிலே சொகுசா மேலே மேலே ஏறிப்போயி கடைசிலே ஒரு பெரிய பட்டணத்திலே போய்க் குந்திட்டோம். ஒரு பெரிய பங்களாவிலே ஒக்காந்துட்டோம். சிப்பருக்குக்கூடத் தனி அறை! எலக்ட்ரிக் லேட்டென்ன, விசிறி என்ன, மூஞ்சி கழுவிக்கிட பேசின் என்ன, அதை ஏன் கேக்கறீங்க, போங்க!

அங்கே குந்திக் கொஞ்ச நாள் ஆனதும் இதாலிலே சிவில் ஆளுங்க இருக்காங்கல்லே, அவங்களையெல்லாம் ஆனமட்டும் பட்டாளத்திலே 'டெம்பரவரி'யா வேலேக்கி வெச்சுக்கோன்னு சேனால் ஆர்டர் குடுத்துட்டான்......"

"ஏன்?" என்று நான் இடையே கேட்டேன்.

"ஏனா? அவங்களுக்கு வேலே குடுக்காட்டா சும்மா யிருப்பாங்களா? நம்ம ஊர் மாதிரியா, சிவசிவான்னு பட்டினி கிடக்க? கலகத்துக்குக் கிளம்பிட மாட்டாங்களா?—அப்போ எங்க கம்பெனியிலேயும் கொஞ்சம் இதாலி ஆள்களை வேலேக்கு வச்சிக்கிட்டோம். அப்போ பிடிச்சது எனக்கு அதிஸ்டம்! ஒரு இதாலிப் பொண்ணு எங்கூட சிப்பரா வந்துட்டா. அவளுக்கு மூப்பது வயசிருக்கும்னு மத்தவங்கள்ளாம் பொறாமையிலே சொன்னாங்க. ஆனா நான் சொல்றேன், கேட்டுக்கிடுங்க, அவளுக்குப் பதினாறு வயசுதான் இருக்கும்! சிறு பொண்ணு......"

"மற்றவர்களுக்கு ஏன் பொறாமை?"



"கல்லாக் கேட்டீங்களே! அவளுக்கு என் மேலே ஆசை விளுந்திடிச்சி. எனக்கும் அவ மேலே ஆசையாயிடிச்சி. இதைப் பாத்தா மத்தவங்களுக்குப் பொறுக்கல்லே. எங்க ஆசை கெடணும்னு கதை கட்ட ஆரம்பிச்சாங்க!

ஆனா நான் என்ன, ஏமாந்த சோணகிரியா? தாம்ரவருணித் தண்ணி குடிச்சில்ல வளர்ந்திருக்கேன்! 'அட போங்

கடா, ஒங்க சோலியைப் பாத்துக்கிட்டு! அவ வயது மூப்பதாத்தான் இருக்கட்டும். இல்லே காப்பதாவே இருக்கட்டும், எனக்கு அவ மேலே ஆசை. அவ்வளவுதான்!'னு ஒரு சத்தம் போட்டேன் பாருங்க, எல்லாரும் ஒடுங்கிட்டாங்க!

இந்தப் பொண்ணு இருக்காளே — அவ பேரு மூனா சீனம்! — நான் அவளை 'ஸிஞோரா'ன்னு கூப்பிட்டுக்கிடுவேன். இந்தாலிலே கலியாணம் கட்டாத பொம்பிள்ளெங்களை 'ஸிஞோரா' இம்பாங்க. கலியாணம் கட்டிட்டா ஸிஞோரினு. அவளும் என்னை 'கருப்' இன்னுக்கிடுவா. வெள்ளெனக்கி வேலைக்கு வந்தா பொளுது சாயுந் தன்னியும் எங்கூடத்தான் வேலை செய்வா. என்ன பொல்லாத வேலைங்க! ஒரு மணி நேரத்திலே முடிஞ்சு போகும். மத்த நேரமெல்லாம் நாங்க ரெண்டு பேரும் பேசிக்கிட்டே இருப்போம். நான் பொறந்து வளர்ந்த கதையை யெல்லாம் அவளுக்குச் சொல்லுவேன்; அவ பாட்லே சிரிச்சிக்கிட்டே கேட்டுக்கிட்டிருப்பா. சோறு திங்கற 'டயன்' ஆயிடிச்சின்னா அவளுக்கும் சேத்து சோறு வாங்கியாருவேன். அவளும் எங்கூடவே திம்பா. அப்பொறம் சீனி, வெண்ணை, ரொட்டி, பணம் — இப்பிடி என்னாலே எதெது கம்பெனிலேருந்து திருட முடியுமோ, அதை எல்லாம் திருடி வந்து அவளுக்குக் குடுப்பேன். எல்லாத்தையும் வாங்கி வச்சிக்கிடுவா. இம்மாஞ் சாமான் 'ஓசியா' அவளுக்குக் குடுத்து, சோறுகூடக் கள்ளத்தனமாப் போட்டா அவளுக்கு எம்மேலே என் ஆசையிருக்காது?

சாயந்திரம் பொளுது போனதும் நாங் குடுத்த சாமானை யெல்லாம் பத்திரமா மூட்டை கட்டிக்கிட்டு எழுந்திருப்பா. 'கருப்' இன்னுக்கிட்டே கையைத் தூக்கி விரலை ஆட்டுவா. அதாவது 'போய் வாரேன்'னு அர்த்தம். 'சரித்தாண்டி, மவனே!' இம்பேன் நானு. சிரிச்சிக்கிட்டே அவ போயிடுவா.

ராப்பூரா நான் அவளையே நெனச்சுப் படுத்துக்கிட்டிருப்பேன். 'இப்பிடியே ரொம்ப நாளா கடந்து வந்தது. இதுக்கு ஒரு வழி பண்ணணும்டான்னு ஒரு நாள் ராமசாமி ஐயன் கிட்டே போனேன்.'

"அது யார் ராமசாமி ஐயன்?"

"எங்க கம்பெனி 'படா பாபு' (ஹெட் கிளார்க்) அவர் தானுங்க. அவர் கிட்டே போய் எல்லாம் சொன்னேன். 'ஐயரே, எப்படியாவது கர்னல்கிட்டே சொல்லி ஒரு அஞ்சு நாள் லீவு குடுக்கச் சொல்லுங்க. அந்தக் குட்டியைக் கட்டிக்கிட்டு வந்துடறேன்!'னு கெஞ்சினேன்.

அவரும் 'சரிடா பார்க்கலாம். அஞ்சு நாள் லீவு உனக்குக் குடுத்தா குடியா முழுகிப் போகப் போவுது? இந்த ஞாத்திக்கிளமை நீ ஆபீஸுக்கு வா. வந்து கர்னல்கிட்டே எல்லா சமாசாரமும் சொல்லு. பாக்கி நான் பாத்துக்கிடறேன்'னு தைரியம் சொன்னார்.

எனக்குச் சந்தோசம் தாங்கல்லே. ஓடியாந்தேன், ஸிஞோரா கிட்டே! 'அடி ஸிஞோரா, நம்ம கலியாணம் கட்டிக்கிடலாம். தொரை ஒரு அஞ்சு நாள் லீவு குடுப்பான். கோவிலோ, குளமோ, சர்ச்சோ, எங்கேயோ போய்க் காரியத்தை முடிச்சிப்பிடலாம்'னு சந்தோசமா சொன்னேன். அதுக்கும் அவ சிரிச்சுக்கிட்டா. எப்போ சிரிச்சுட்டாளோ அப்பொ சம்மதங்கிறது தெரிஞ்சுது, பாருங்க! எனக்குச் சந்தோசம் தாங்கல்லே. அப்படியே அவளைக் கட்டிக்கிட்டேன். அவளா 'கருப்,' 'கருப்'னு கிட்டு எம்மேலே சாஞ்சிட்டா!

ஞாத்திக்கிளமை எப்பொடா வரும்னு காத்துக்கிட்டிருந்தேன். அந்த நாளும் வந்தது. அன்னிக்கிக் காலங் காத்தாலேயே நான் எந்திரிச்சு பூட்ஸுக்குப் பாலிஷ் போட ஆரம்பிச்சுட்டேன். 'மவனே, இன்னிக்கி எல்லா வேலையும் நீயே பார்த்துடுன்னு ஸிஞோராகிட்ட சொன்னேன். அவளும் சிரிச்சுக்கிட்டே வேலையை ஆரம்பிச்சா. அப்பிடிச் சிரிச்சுச் சிரிச்சுத்தானே என்னைப் பைத்தியமாக்கிட்டா மவ!

பூட்ஸு பாலிஷ் போட்டு, பெல்டுக்கும் பாலிஷ் போட்டு, நானே ஒரு கர்னல் மாதிரிக் கிளம்பினேன். 'தப்தரு'க்குப் போனதும் மொதல்லே ராமசாமி ஐயனைத் தான் கண்டு பேசினேன். 'ஏதோ இந்தச் சமயத்திலே கொஞ்சம் கவனிச்சுக்க ஐயரே!'ன்னேன்.

'அதெல்லாம் பயந்துக்கிடாதே! இப்பிடி அவங்கிட்டச் சொல்றேன்'னு உள்ளே போனான் ஐயன். கொஞ்சங் கழிச்சுத் திரும்பி வந்தான். 'ஒன்னைப் பாத்துப் பேசணும்ங்கான். தைரியமாப் போய்ப் பேசு!'ன்னான். 'கர்னல், ஐயன் கிழிச்ச கோட்டைத் தாண்டமாட்டான்'னு பேரு. பேரு பிடிக்கற கையாச்சுங்களே!

ஐயன் என் பின்னாடே வர, நான் உள்ளே போயி கர்னல் முன்னாலே 'அட்டெஞ்

சன்'லே நின்னு 'டக்'குனு ஒரு சல்யூட் அடிச்சேன். கர்னல் அசந்துட்டான்! 'என்னடா சமாசாரம்?' என்றான்.

நான் தைரியமா அவங்கிட்ட எல்லாஞ் சொன்னேன். 'ஸினோரா மேலே எனக்கு ஆசை வுளுந்துடிச்சி. அவளும் எம் மேலே ஆசையா யிருக்கா. அஞ்சு நாள் லீவு குடு. ஒம் புண்ணியமாப் போகட்டும். நான் கலியாணம் கட்டி வாரேன்!' என்றேன்.

ஐயன் அதெ இங்கிலீஷிலே கர்னல் கிட்ட சொன்னான். ஒடனே கர்னல் இங்கிலீஷில் என்னமோ சொன்னான். ஐயன் அதெ எங்கிட்ட சொன்னான்.

என்ன சொன்னாங்கிறீங்க?

'அடே நீ சிப்பர். இந்தச் ஸினோராவை நீ கட்டிக் காவந்து பண்ண முடியுமாடா? இங்கே கம்பெனிச் சொத்தைத் திருடி அவளுக்குக் குடுக்க முடியுது ஒன்னாலே. ஒன் ஊர்லே இவளைக் கொண்டு போய்க் காப்பாத்த முடியுமாடா? ஊர்லேருக்கிறவங்க இதுக்கு ஒப்புப்பாங்களா? மண்டையிலே மூளையில்லாம என்டா இப்பிடி பேசறே?'ன்னான்!

எனக்கு எப்படி யிருக்கும்? இவன் ஒடனே லீவு குடுப்பான், நம்ம ஸினோராவைக் கலியாணம் கட்டலாம்னு நான் நெனச்சதென்ன, இவன் சொல்றதென்ன? ஆத்திரமா வந்திடிச்சி எனக்கு! சத்தம் போட ஆரம்பிச்சுட்டேன் :—

'அடே வெள்ளைக்கார நாயே! மண்டையிலே மூளை உனக்கில்லையாடா, எனக்கு இல்லையாடா? நான் சிப்பர்னாலும் உப்புஞ் சோறும் தின்னற சிப்பர்டா! இன்னிக்கிச் சாயந்திரத்துக்குள்ளே என் தாலி ஸினோரா கழுத்திலே ஏறுதா இல்லையா, பாரு! இல்லாட்டா ஒம் மேசை மேலே என் கழுத்தை வெட்டி வெச்சுப் பிடறேன்!'னு தமிள்லே ஒரே கூச்சல் போட்டேன்.

கர்னல் பயந்துட்டான். ஐயன் கிட்ட 'இவன் என்னடா இப்பிடிக் கூச்சல் போடறான்!' என்றான்.

அப்போ மட்டும் நான் சொன்னதை ஐயன் அப்பிடியே கர்னல்கிட்டே சொல்லி யிருந்தா என் தலையைக் கொய்து போட்டிருப்பான்! ஆனா ஐயன் என்ன சொன்னான்னு எனக்கு விளங்கலே. கர்னல் என்னையே உத்துப் பாத்துக்கிட்டிருந்தான்.

எனக்குக் கிலி பிடிச்சிடிச்சு, சரி, சத்தம் போட்டதே போட்டோம். இவன் துப்பாக்கியாலே சுடறத்துக்குள்ளே இன்னுங் கொஞ்சம் ஆத்திரம் தீரக் கத்தலாம்னு மறுபடி சத்தம் போட்டேன் :—

'திருட்டு நாய், நானா நீயாடா? எங்க ஊரெல்லாம் வந்து கொள்ளையடிக்கிற சாதியில்லே, நீ!'ன்னு மறுபடியும் தமிள்லேயே கத்தினேன். என் கோவம் ஐயன் மேலேயும் பாஞ்சுது. 'அடே ஐயா, என்னடா அவங் காதிலே கோண எழுத்துலே ஓதிக்கிட்டிருக்கே? சரியான ஆம்பிள்ளையாயிருந்தா நேருக்கு நேர் எங்கிட்ட பேசு, பார்க்கலாம்!'ன்னு மீசை மேலே கையைப் போட்டேன்.

இதுக்குள்ளே நான் போட்ட சத்தங் கேட்டுச் ஜமேதாரு, சுபேதாரு எல்லாரும் பின்னாலேருந்து ஓடியாந்தாங்க. கர்னலும் ஐயனும் முளிக்கறதையும் நான் கூச்சல் போடறதையும் பாத்து அவங்களும் பயந்துட்டாங்க. ஆனா அந்தச் சுபேதாரு கொஞ்சம் தெம்பானவன். 'டப்'பின்னு பின்னாலேருந்து என்னை ஒரே கட்டாக் கட்டிப்பிட்டான். நான் ஒரே கூச்சல் போட்டேன். அவன் விடல்லே. கடைசிலே நான் களைச்சிப் போயிக் குந்திட்டேன்!

கர்னல் ஒடனே ஒரு லாரிலே என்னை வக்கார வெச்சு ரெண்டு சிப்பாய்களை எனக்குக் காவல் வெச்சான். அவங்க கையிலா துப்பாக்கி இருக்குது! பார்த்தேன். சரி, 'சமயத்துக்குத் தகுந்தாப்பலே போகணும்'னு 'கம்'முன்னு குந்திட்டேன்!

கர்னலே லாரியை ஓட்டிக்கிட்டுப் போயி மிலிடரி ஆசுபத்திரிலே கொண்டு விட்டான். ஆசுபத்திரிலேயும் ஒரு கர்னல் உண்டுல்ல, அவங்கிட்ட என்னைக் காட்டிக் காட்டி இங்கிலீஷிலே ரொம்ப நேரம் பேசினான்.

ஒங்களுக்குக் கேக்க கேக்க ஆச்சரியமா யிருக்கும், என் கதை! என்ன ஆயிருக்கு, தெரியுங்களா? அந்தத் தர்ம தொரை ஐயனை நான் அப்பிடியெல்லாம் பேசினேனே, அவன்தான் அன்னிக்கி என் உசிரைக் காப்பாத்தியிருக்கான். நான் மொதல்லே சத்தம் போட ஆரம்பிச்சதும் நான் சொன்னத்தை கர்னல் கிட்ட அவன் சொல்லவே யில்லே! 'ஸார், இவன் பேசற பாஷையே எனக்குப் புரியலே. என்னமோ உளறுகிறான். ஸினோராவைக் கட்ட முடியலேங்கவும் இவனுக்குப் பைத்தியம் பிடிச்சிக் கிடிச்சி போலிருக்கு!'ன்னு சொல்லியிருக்கான்! அதுக்குள்ளே நானும் மறுபடி கூச்சலை ஆரம்பிச்சேனா? ஒடனே கர்னலும்

'நான் நெசமான பைத்தியர்தான்!'னு நம்பிட்டான். இதெல்லாம் அப்புறம் ஐயன் சொல்லித்தான் எனக்குத் தெரியும்.

அப்புறம் கேளுங்க, ஆசுபத்திரிலே நான் 'பக்கு, பக்கு'ன்னு முளிச்சிக்கிட்டு குந்திக் கிட்டிருந்தேன். ஆசுபத்திரி கர்னல் என்னை தட்டிக் குடுத்து ஒரு படுக்கேலே படுக்க வெச்சு அங்கேருந்த டாக்கிட்டர் கிட்ட என்னமோ இங்கிலீஸ்லே சொல்லிட்டுப் போயிட்டான்.

அந்த டாக்கிட்டரு பைத்தியத்திலே நிபுணரும். பைத்தியக் கேசெல்லாம் 'குடை குடை'ன்னு குடைஞ்சு நல்ல புத்திக்கிக் கொணந்துடுவாராம்!

அவரு என்னையும் கேள்வி கேக்க ஆரம்பிச்சாரு. அவர்கூட ஒரு நர்சு—நம்ம தமிளாள்தான்—இருந்தா.

எனக்கா பயமாப் போச்சு. ஐயன் எப்பிடியெல்லாம் பண்ணியிருக்கான்னுதான் எனக்கு அப்பத் தெரியாதே! நான் என்ன நெனச்சேன்? — 'ஐயனும் கர்னலுமாச் சேர்ந்து நம்ம வேலைக்குச் சீட்டுக் கிளிக்க வளி பார்த்துட்டாங்க'ன்னு நெனச்சிட்டேன். அதுனாலே இந்தப் பைத்திய டாக்கிட்டர் கேள்வி கேக்க ஆரம்பிக்கவும் எனக்கு வயிறு எரிஞ்சுது பாருங்க, நான் சத்தம் போட ஆரம்பிச்சுட்டேன்:—

'அடே, அவ்வளவுக்கு உனக்குத் தைரியம் வந்துடுச்சா? என் வேலைக்கிச் சீட்டைக் கிளிச்சே, ஒங் குடலைக் கிளிச்சு எடுத்துப்புடுவேண்டா!'ன்னு கத்தினேன்!

ஒடனேயே அந்த நர்சு 'ஊ'ன்னு கத்திக்கிட்டே அங்கேருந்து ஓடிட்டா! டாக்கிட்டரும் பயந்துக்கிட்டு அவ பின்னு லேயே ஓடிக் கதவை வெளிலே தாப்பாப் போட்டுட்டான்!

அந்த டாக்கிட்டர் வெளிலே போனதும் நர்சைக் கேட்டிருக்கான், 'அந்தக் கிறுக்கன் என்ன சொன்னு?'ன்னு. அவ நாஞ் சொன்னதே இங்கிலீஸ்லே சொல்லியிருக்கா, ஒடனே அவன், 'இது ஒரு முத்திப்போன மூளைப் பைத்தியம்!'னு எளுதிப் போட்டான்!

அப்புறம் அவன் எங்கிட்ட வரவே யில்லே. நர்சும் என்னை வந்து பார்க்கலே. நான் ரூமுக் குள்ளேயே இருந்தேன். சாயந்திரம் ஒருத்தன் கதவை லேசாத் தொறந்து, சோறு தண்ணியை உள்ளே கொணர்ந்து வெச்சிட்டு, மறுபடி கதவைப் 'படார்'னு சாத்திக்கிட்டுப் போயிட்டான்!

இப்படி ரெண்டு மூனு நாள் அங்கேயே இருந்தேன். அப்புறம் என்னைக் கப்ப லேத்திக் காரச்சிக்கு அனுப்பிச்சாங்க. அதுவும் எப்படி? முத்தின மூளைப் பைத் தியமில்லே? அதுனாலே ரெண்டு சிப்பாய் காவலோட ஒரு தனி அறையிலே ராசா மாதிரி அனுப்பிச்சாங்க!

காரச்சி ஆசுபத்திரிலே எஞ் சீட்டு கிளிஞ் சுது! 'இது பெரிய பைத்தியம்! இன்னமே பட்டாளத்துக்குப் 'பிட்'டில்லே!'ன்னு எளுதிப்பிட்டான்!" என்றான் கருப்பையா.

"சரி, ஆனால் பென்ஷன் எப்படிக் கிடைக்கிறது?" என்று கேட்டேன்.

"அதுவும் நம்ம ஐயன் செஞ்ச வேலை தான்! அவன் சொல்லிக் கர்னல் பெஞ்சு னுக்கு எளுதிப்பிட்டான். மவராசன் தருமத்திலே மாசம் பத்து ரூவா பெஞ்சன் வருது!" என்றான்.

"உன் ஆசையில் மண்ணைப் போட்ட அவனை 'மவராசன்' என்கிறாயே!" என்றேன்.

"நல்லாச் சொன்னீங்களே! அவனை மவராசன்னு ஒரு தரம் சொன்னாப் போறுமா? என்னமா புத்தி சொன்னான்? அவன் சொன்னது மெய்தானுங்களே! அந்தக் களுதையைக் கட்டிக்கிட்டு வந்து இங்கே காப்பாத்த முடியுமா?"

"அது சரி. இப்போ முருகாயியை யாவது கலியாணம் கட்டினாயா, இல்லையா?"

"அவ வேறே ஒருத்தனைக் கட்டிக்கிட்டா. அதுவும் எங்க அப்பன் வேலைதான்! 'முரு காயியைக் கட்டிக்கடான்னேன். முடியா துன்னு பட்டாளத்துலே போய்ச் சேர்ந் துட்டான் என் மவன்'னு ஒரு கதை யைக் கட்டிட்டான்! அவ அது நெசமாக் கும்னு நம்பி இன்னொருத்தனைக் கட் டிக்கிட்டா!" என்றான்.

இந்தச் சமயத்தில் ஆபீஸ் பியூன் என் பெயரைக் கூப்பிட்டான், பென்ஷன் வாங் கிக் கொள்ள. நான் கருப்பையாவிடம் விடை பெற்றுக்கொண்டு எழுந்தேன். போகும்பொழுது, "ஆமாம், கருப்பையா! உன்னை ஒன்று கேட்க மறந்து விட்டேனே! உனக்குக் கலியாணம் கட்டியாச்சா, இல்லையா?" என்று கேட்டேன்.

"அது ஆயிடுச்சிங்க. எங்க அப்பாரு சொன்னாரே அந்தக் கருப்பாயியைத்தான் கட்டிக்கிட்டேனுங்க!" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் கருப்பையா.

குணம் ... மணம் ... சுவைகளுக்கு

# பெயர் பெற்ற சிவபுரி புகையிலை

**உபயோகியுங்கள் !** **உள்ளங் குளிருங்கள் !!**




புகையிலை பயிர் செய்வோரின் கூட்டுறவு கொண்டு கலப்பற்ற அசல் சிவபுரிப் புகையிலை முதல் முதலாக விற்பனை செய்கிறோம் என்பதை மிக மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம். இலைகளாகவும் பாக்கெட்டுகளாவும் கிடைக்கும். சிவபுரி புகையிலை என்ற பெயர் ஒவ்வொரு பாக்கெட்டிலும் இலையிலும் காணலாம்.

**விலை விபரம்**

இலைகள் { ஸ்பெஷல் பவுண்டு 1-க்கு ரூ. 3-0-0
முதல்தரம் .. .. ரூ. 2-8-0

வியாபாரிகள் தேவை :

## ஸ்ரீ சிவபுரி புகையிலை லிமிடெட்,

சிவபுரி (Via) சிதம்பரம்

---

# அரைக்கீரை விதைத் தைலம்




●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

●

மதராஸ் விடி ஏஜண்டுகள் :

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி**

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும் சோல் ஏஜண்டு :

**B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்**



# பரிசோதனை

ஆசிரியர்: விச்வம்பரநாத் கௌசிக்
மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ஜஸ்லோ தன் அறையை அடைந்து கட்டிலில் படுத்த வண்ணம், "இதென்ன, நான் அசட்டுத்தனம் செய்து விட்டேனே! அப்பாதான் தயாராயிருந்தாரே, நான் வாயைத் திறந்திருந்தால் நடந்திருக்குமே! சே, எப்படி அவரிடம் சொல்வது? தாத்தாவுக்கும் இது பிடிக்காது. தாத்தாவின் எண்ணத்திற்கு எதிராகச் செய்தால் அப்பா என்னென்ன கஷ்டம் எல்லாம் அனுபவிக்க வேண்டி வருமோ!—என் உயிர் போனாலும் சரி, அப்பாவுக்கு இனி எந்தவிதமான கஷ்டமும் கொடுக்கக் கூடாது. அவருடைய வாழ்க்கை பூராவுமே கஷ்டம் நிரம்பியது — இனியாவது அவர் நிம்மதியாகக் காலம் கழிக்கட்டும். நான் என் சுகத்திற்காக அவருக்குக் கஷ்டம் அளிப்பதா? தாத்தா பாட்டிக்குத் துக்கம் விளைவிப்பதா?" என்று எண்ணமிடலானாள்.

"ராமநாத பாபுவுக்குக் கல்யாணம் ஆகிவிட்டால்!" என்று அவளுடைய காதில் யாரோ சொல்வது போலிருந்தது. அவள் உடல் பதறிற்று. "ராமநாத பாபு இன்னொருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டால் தன் வாழ்க்கையே அஸ்தமித்து இருட்டிவிடுமே!" என்ற எண்ணம் அவளுடைய உள்ளத்தில் ஒரு கணம் எழுந்தது. ஆனால் மறுகணம், "ராமநாத பாபு அப்படியெல்லாம் செய்யமாட்டார். அப்படிச் செய்துகொண்டு விடுவாராகில் என்னிடம் அவருக்கு அன்பில்லை, அன்பு செலுத்துவதாக நடித்தார் என்று உணர்ந்து கொண்டு விடுவேன். எப்படியும் ஒருவிதத்தில் அவருடைய அன்பைப் பரீக்ஷித்தது போலாகிவிடும் அல்லவா? அவர் உண்மையாகவே என்னைக் காதலிப்பாராகில் ஏதாவது ஒரு உபாயம் கண்டுபிடித்து எல்லாரையும் சம்மதிக்கும்படி செய்து விடுவார் என்று எண்ணினாள்.

இதேமாதிரி யோசனையில் ஆழ்ந்தவாறு அவள் தூங்கிவிட்டாள்.

* * *

மறுநாள் காலையில் ஜமீன்தார் சுந்தராமைக் கூப்பிட்டு, "பாபுஜி இன்னும் வேட்டையாடப் போகிறதில்லையாம். அவருக்கு உடம்பு சரியில்லையென்று ஊருக்குப் போகவேண்டும் என்கிறார். நம் வீட்டுக்கு வருகிறவர்களுக்கெல்லாம் இப்படி ஏதாவது தடைகள் வந்து சேர்ந்து விடுகிறதே, என்ன செய்வது?" என்று வருத்தத்துடன் கூறினார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இன்னொரு தடவை வரும்போது போனால் போச்சு! இதற்காக ஏன் வருத்தப் படுகிறீர்கள்?" என்றார் விராஜகிசோர்.

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு ஜமீன்தார் ஸ்நானம் செய்யப் போய் விட்டார். விராஜகிசோர், சுந்தராமிடம் "என்ன நிச்சயமாயிற்று?" என்று கேட்டார்.

"நேற்றுச் சொன்ன பதில்தான்."

"ஜஸ்லோ என்ன சொன்னாள்?"

"அவளும் ஒளிவு மறைவாக எதுவும் செய்வதற்கில்லை என்றுதான் சொல்லச் சொன்னாள்!"

"உண்மையாகவா?" என்று ஆச்சரியம் மிகுந்த கேள்வியைக் கேட்டுவிட்டு, விராஜகிசோர் "ஜஸ்லோ இப்படிச் சொல்லியிருப்பாளா? உண்மையாக அவள் இந்த பதிலைச் சொல்லியிருந்தால் அவளுடைய தியாகத்தையும் புத்திசாலித்தனத்தையும் வியக்கத்தான் வேண்டும். ராமநாதபாபு மாதிரி முட்டாள் உண்டோ? ஜஸ்லோ என்னைக் காதலிக்கிறாள் என்று பீற்றிக் கொண்

டானே! இந்தப் பதிலைக் கேட்டால் தானாக அவனுக்குப் புத்தி வந்துவிடும்" என்று மனத்துள் கூறிக்கொண்டார். பிறகு "சரி, நான் அவரிடம் சொல்லி விடுகிறேன். அவ்வளவுதானே!" என்றார்.

"உங்களுக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. நான் அப்பா—அம்மாவுக்குத் தெரியாமல் கல்யாணம் செய்து கொண்டு என்ன சுகத்தைக் கண்டேன்? ராமநாத பாபுவுக்கு நீங்கள் எடுத்துச் சொல்லுங்கள்" என்றான் சர்தாராம்.

"நானும் சொன்னேன்; ராமநாத பாபு கேட்கவில்லை. அதுதான் வந்தேன். சரி, இன்றைக்குச் சாயந்திர வண்டியில் போய் வருகிறேன்."

"சொல்வதை அவருக்குக் கெடுதலாகப் படாமல் இருக்கும்படி சொல்லுங்கள். நான் வேறென்ன செய்வது?"

"நான் எல்லாம் சொல்லிக் கொள்கிறேன். நீ கவலைப்படாதே!" என்றார் விரஜகிசோர்.

## 24

விரஜகிசோர் கான்பூரை அடைந்தார். ராமநாத பாபு அவரை எதிர்பார்த்த வண்ணம் அமர்ந்திருந்தார். இருவருக்கும் தனிமை கிடைத்தபொழுது ராமநாத பாபு, "என்ன, என்ன ஆயிற்று?" என்று கேட்டார்.

"அவன் தன் தகப்பனாரின் அனுமதியின்றிக் கல்யாணம் செய்வதற்குத் தயாராயில்லை" என்று பதில் அளித்தார் விரஜகிசோர்.

ராமநாத பாபு வருத்தம் தோய்ந்த குரலில், "உண்மையாகவா?" என்றார்.

"நன்றாயிருக்கிறதே, நான் பொய்யா சொல்கிறேன்? 'நான் ராமநாத பாபுவின் அடிமைதான். இருந்தாலும் இந்த விஷயத்



இல் நான் ஒன்றும் செய்வதற்கில்லை' என்று அவன் தெளிவாகச் சொல்லிவிட்டான்."

"அப்படியானால், நான் ஜஸ்லோவைக் கல்யாணம் செய்துகொள்வது அவனுக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லு."

"அப்படிச் சொல்லிவிட முடியாது. அவனுக்குச் சம்மதம்தான். ஆனால் அவன் அப்பாவும், உன் அப்பாவும் சம்மதித்தால் தான் முடியும் என்கிறான்."

"அப்பொழுது கல்யாணம் நடந்தாற் போலத்தான்!"

"இரண்டு பேரும் உயர் குடும்பத்தவர்கள். ஒளிவு மறைவாகக் கல்யாணம் செய்துவிட முடியுமா, என்ன?"

"நர்தாராம் நினைத்தால் முடியும்.'

"முடியும். ஆனால் அவன் வீட்டை விட்டு விட்டுப் பழையபடி ஓட வேண்டியதுதான்!"

"சரி, அது இருக்கட்டும். வேறு ஏதாவது விசேஷம் உண்டா?"

"ஜஸ்லோ என்னைக் காதலிக்கிறாள், காதலிக்கிறாள் என்று பீற்றிக் கொண்டிருந்தாயே, அவளே அப்படிச் சொல்லிவிட்டாளே!"

ராமநாத பாபு பிரமித்துப் போய் மௌனம் சாதித்தார். பிறகு மெதுவாகத் தலை நிமிர்ந்து, "ஜஸ்லோகூட இப்படிச் சொல்லுவாள் என்று நான் நினைக்கவே இல்லை" என்றார்.

"அப்படியானால் நீ சொன்னதும் அவள் வீட்டுவாசலை விட்டுவிட்டு ஓடிவந்து விடுவாள் என்று நினைத்தாயோ?"

"அப்படியில்லை. கல்யாணம் செய்து கொள்ள மறுதளிக்க மாட்டாள் என்று எண்ணியிருந்தேன்."

"அவள் எங்கே 'மாட்டேன்' என்று சொன்னாள்.. ஒளிவு மறைவாகக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்றுதானே சொன்னாள்?"

"எப்படிச் சொன்னால் என்ன? மாட்டேன் என்றுதானே அர்த்தம்!"

"இருக்கலாம். ஏனென்றால் நீ அவளுடன் அதிகமாக நெருங்கிப் பழகியவன். உனக்கு அவளுடைய சுபாவம் நன்றாகத் தெரிந்திருக்கும். ஆகையால் நீ சொல்வதை நான் நம்பித்தானே ஆகவேண்டும்!"

விராஜகிசோரின் இந்த வார்த்தைகளைக் கேட்ட ராமநாதபாபுவுக்குச் 'சுரீர்' என்று தைத்தது. "அவள் என்னைக் காதலிக்கிறாள் என்பதில் எனக்கு இன்னமும் சந்தேகமே கிடையாது!" என்றார்.

"அப்படியிருக்கும்பொழுது அவள்மீது ஏன் இந்த அபாண்டம் சுமத்துகிறாய்? அது போகட்டும். இனி என்ன செய்வதாக உத்தேசம்?"

"உத்தேசம் என்ன! அவளை மறக்க வேண்டியதுதான். என்னாலான முயற்சிகள் செய்தேன். இதைவிட நான் வேறு என்ன செய்ய முடியும?"

"ஆமாம், உன் கல்யாணம்......?"

"ஆனால் ஆகவேண்டியதுதான். அந்தப் பக்கத்தில் ஒத்துழைப்பு இல்லை என்றால் நான் என்ன செய்துதான் என்ன பிரயோசனம்? ஆனால் மனசுக்கு ரொம்ப சிரமமாயிருக்கிறது......"

"அதெல்லாம் போகப் போகச் சரியாகிவிடும். இதுமாதிரி எல்லாம் நடக்கும் என்று எண்ணி எதற்குமே தயாராக இருக்கவேண்டும்."

"தயாராகத்தானே இருக்கிறேன்! இருந்தாலும் மனதை என்னவோ செய்கிறது. அவளைக் காதலித்தேன். கல்யாணம் செய்து கொள்ளவும் முயற்சித்தேன். ஆனால் நடக்கத்தான் இல்லை. இனி வருந்தி என்ன பிரயோசனம்?" என்று கூறிப் பெருமூச்சு விட்டார் ராமநாத பாபு.

விராஜகிசோர் மனதிற்குள்ளேயே சிரித்தவாறு, "நல்ல காதல் இது! ஒரு சின்னஞ்சிறு கஷ்டத்தைக்கூட இவனால் பொறுக்க முடியவில்லை. எல்லாக் காதலும் எங்கேயோ மறைந்து விட்டது. வேறு கல்யாணம் செய்துகொள்ளத் தயாராகிவிட்டான். இப்படியெல்லாம் ஆகும் என்று எனக்கு முன்னாலேயே தெரியும். இனிமேல் ஜஸ்லோவையே மறந்து விடுவான். பாவம், அவள் மனம் என்ன பாடு படுமோ? எல்லாம் அவளுடைய மனதும் மாறிவிடும். இதுதானே உலகம் என்பது!" என்று எண்ணிக் கொண்டார். சிறிது நேரம் கழித்து, "ராமநாத்! நான் இன்று சாயந்திர வண்டியிலேயே ஊருக்குப் போகலாம் என்று இருக்கிறேன்" என்றார்.

"இன்று சாயந்திரமேயா? எல்லாம் நாளைக்குப் போகலாம், அப்பா! உன்னிடம் இன்னும் எவ்வளவோ பேசவேண்டியிருக்கிறது" என்று சொல்லி, அவருடைய பிரயாணத்தைத் தள்ளிவைத்து விட்டார் ராமநாத பாபு.

இரவு இரு நண்பர்களும் ஒரே அறையில் படுத்துக் கொண்டனர். ராமநாதபாபு, "விராஜகிசோர், ஜஸ்லோவுடன் எப்படி

யாவது எனக்குக் கல்யாணம் ஆவதற்கு ஏதாவது ஒரு யோசனை சொல்லமாட்டாயா?" என்று கேட்டார்.

"என்ன, இன்னும் பித்தன்மாதிரி பேசுகிறாயே? அவளை மறந்துவிடு அப்பா! அதெல்லாம் நடக்காத காரியம். யோசித்து என்ன பிரயோசனம்?" என்றார் விஜயகிசோர்.

"இதற்குத்தானா உன்னைக் கேட்டேன்?"

"ஒன்று செய். சுந்தராம் வீட்டு வாசலில் போய்க் கல்விடிமங்கன் மாதிரி உட்கார்ந்து கொண்டு, ஐஸ்வோவை எனக்குக் கல்யாணம் செய்து கொடு, இல்லாவிட்டால் இங்கேயே உயிரை விட்டு விடுவேன் என்று மறியல் செய். என்ன ஆகிறது பார்ப்போம்."

"உன்னை யோசனை கேட்கப்போனால் முழுப் பைத்தியமாக்கி விடுவாய் போலிருக்கிறதே!"

"காதல் வழி என்றால் புஷ்பம்போல சொகுஸாக இருக்கும் என்று நினைத்தாயோ? காடு முரடாகத்தானிருக்கும். கஷ்டப்பட்டு முன்னேறினால்தான் அதில் சுகம் கிட்டும்!" என்று பரிகாசமாகச் சொன்னார் விஜயகிசோர்.

"போதுமே!" என்று ஆத்திரத்துடன் சொல்லிவிட்டு ராமநாத பாபு மௌனம் சாதித்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் விஜயகிசோர் தூங்கி விட்டார். ராமநாத பாபுவும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு, போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டார்.

* * *

காலையில் எழுந்ததும் பல் துலக்கி விட்டு இரு நண்பர்களும் தேத்தண்ணீர் அருந்திக் கொண்டிருந்த பொழுது ஹாரத்வாரி வந்து, "பெரிய எசமான் உங்கள் இரண்டு பேரையும் கூப்பிடுகிறாங்க!" என்றான்.

இருவரும் வக்கீல் சியாமநாத பாபுவின் அறையை அடைந்தார்கள். அவர் சிரித்துக் கொண்டே, "ராமுவுக்குக் கல்யாணம் நிச்சயமாகிக் கொண்டிருக்கிறது. பெண்ணின் போட்டோகூட வந்திருக்கிறது. நீயும் ராமுவும் பாருங்கள்!" என்று சொல்லி விஜயகிசோரின் கையில் ஒரு போட்டோவைக் கொடுத்தார். விஜயகிசோர் போட்டோவைப் பார்த்து விட்டு, "பெண் தேவலை!" என்றார்.

சியாமநாத பாபு முக மலர்ச்சியுடன், "பெண் நன்றாக இருக்கிறாள். எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. பையனையும் கேள். எனக்குக் கோர்ட்டுக்குப் போக நேரமாகிறது. நான் ஸ்நானம் செய்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு எழுந்தார்.

அவர் போனதும் விஜயகிசோர், "பார், அப்பா! எனக்குப் பெண் பிடித்திருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே போட்டோவை ராமநாத பாபுவின் கையில் கொடுத்தார்.

"உனக்குப் பெண் பிடித்திருந்தால் எனக்குப் பிடித்துவிடுமா? நான் அல்லவா கல்யாணம் செய்துகொள்கிறவன்? எனக்கு ஐஸ்வோதான்......"

"அதெல்லாம் இருக்கட்டும். உனக்கு இந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமா இல்லையா, சொல்லு!"

"உன் அபிப்பிராயம் என்ன? ஐஸ்வோவை......"

"நடக்காத காரியத்தைப் பற்றி என் பேசுகிறாய்? இந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பாத எவனும் இந்த உலகத்தில் இருக்க முடியாது."

"பலி ஆடுபோல இந்த விவாக பலிக்கு நான் ஆளாகத்தான் வேண்டுமாக்கும்!"

"சே, அப்படியெல்லாம் சொல்லாதே! கல்யாணம் ஆகிவிடட்டும்; அப்புறம் எவ்வளவு குஷியாய் இருக்கிறாய், பாரேன்!"

"என்னவோ போங்கள்! எப்படியிருந்தாலும் கடைசியில் பெரியோர் சொற்படி நடந்துதானே ஆகவேண்டியிருக்கிறது?" என்று சலித்துக்கொண்டார் ராமநாத பாபு.

## 25

ராமநாத பாபுவின் கல்யாணத்திற்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. நிச்சயதார்த்தமும் முடிந்துவிட்டது. இப்பொழுதெல்லாம் ராமநாத பாபு யசோதாராவுக்காக — யசோதாராவின்மீது தனக்கு ஏற்பட்டிருந்த காதலுக்காக—நான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்துவிட்டதாகவும், யசோதாராதான் கல்யாணம் செய்துகொள்ள மறுதளித்துவிட்டதாகவும் அது அவளுடைய தப்பிதமெனவும் எண்ணி அவள்பால் உதாசீனமாக இருக்கலானார். ஆகையால் யசோதாராவின் உள்ளத்து உயர்வை அவரால் உணர முடியவில்லை; உணர அவர் முயற்சிக்கவும் இல்லை.

யசோதாராவுக்கு இந்த வருஷமே கல்யாணம் செய்துவிட வேண்டுமென்று டாகுர் அர்ஜுன்சிங் எண்ணினார். அதற்காக வேண்டிய முயற்சியும் எடுத்துக் கொண்டார். ஒரு நாள் நந்தராமைக் கூப்பிட்டு, "நம் ஜஸ்ஸோவுக்கு இந்த வருஷம் கல்யாணம் செய்து விடலாம் என்று எண்ணி இரண்டு மூன்று வரன்கள் பார்த்திருக்கிறேன். சீதளபுரத்து ஜமீன்தாரிணியின் பிள்ளை எந்த விதத்திலும் நல்ல வரன் என்று எனக்குத் தோன்றுகிறது. உன் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

"என்னை எதற்குக் கேட்பானேன்! உங்கள் இஷ்டப்படியே செய்யுங்கள். எனக்கு ஒருவித ஆட்சேபணையும் இல்லை" என்றான் நந்தராம்.

"ஜஸ்ஸோவும் பெரியவளாகி விட்டாள். இந்த வருஷமே கல்யாணத்தை முடிப்பதுதான் உசிதம். ஆகையால் அதற்கான ஏற்பாட்டைச் செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, யசோதாராவின் கல்யாணத்திற்கான ஏற்பாட்டில் முனைந்தார் ஜமீன்தார்.

யசோதாராவின் காதுகளிலும் இந்தச் செய்தி எட்டியது. ராமநாதபாபுவைத் தவிர வேறு யாரையுமே நினைக்காத அவளுடைய மனம் படாத பாடு பட்டது. என்ன செய்வது என்று அவளுக்குப் புரியவே இல்லை. "தந்தையிடம் தன் அந்தரங்க எண்ணத்தைச் சொல்லி விட்டால் என்ன?" என்று எண்ணினாள். ஆனால் அதற்கு மனம் துணிந்தால்தானே? என்ன சொல்வது? எப்படிச் சொல்வது? சொன்னால் அப்பா என்ன எண்ணுவார்? வெட்கத்தை விட்டு அவரிடம் எப்படிச் சொல்வது? அப்படிச் சொன்னாலும் அவர் சம்மதிக்க வேண்டாமா? சம்மதிக்காவிட்டால் என்ன ஆகும்? இம்மாதிரி அநேகக் கேள்விகள் அவளுடைய உள்ளத்தை முற்றுகை இட்டன. அநேக நாட்கள் இதே யோசனையில் ஓடி மறைந்தன. கல்யாணப் பேச்சும் வளர வளர்ந்தது. யசோதாராவைச் சமீபத்தில் வைத்துக் கொண்டே, அவளுடைய பாட்டி தன் வீட்டுக்கு வருவோர் போவோரிடமெல்லாம் சந்தோஷத்துடன், "எங்கள் ஜஸ்ஸோவுக்குக் கல்யாணம் நிச்சயமாகப் போகிறது. மாப்பிள்ளையாக வரப்போகிறவன் ரொம்ப ரொம்ப கெட்டிக்காரனாம். அவன் குடும்பத்தைப் பற்றி அவருக்குக்கூட (ஜமீன்தாருக்கு) நன்றாகத் தெரியுமாம். கடவுள் புண்ணியத்தில் ஜஸ்ஸோவுக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் அப்புறம் மனதுக்கு நிம்மதிதான்!" என்று சொல்லலானாள்.

கிராமத்து மாதர்களும் தங்கள் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளலாயினர். ஆனால் யசோதாராவுக்கு இந்தப் பேச்சுக்களே கொஞ்சங்கூடப் பிடிப்பதில்லை. அவளுக்கு அழுகை அழுகையாக வரும். வரவரக் கல்யாணப் பேச்சு அதிகரிக்கிறது, இன்னும் முற்றிவிட்டால் அப்புறம் ஒன்றுமே செய்ய முடியாது என்பதை உணர்ந்த யசோதாரா, தகப்பனாரிடம் எப்படியாவது தன் மனதில் உள்ளதைச் சொல்லிவிட வேண்டும், அப்புறம் தலையில் எழுதின எழுத்துப்படி நடந்து விட்டுப் போகிறது என்ற முடிவிற்கு வந்துவிட்டாள்.

யசோதாரா இந்த முடிவுக்கு வந்த அன்றே ஒரு சம்பவம் நடந்தது. அன்று டாகுர் தம் ஆஸ்தான மண்டபத்தில் உட்கார்ந்திருந்தார் அப்பொழுது ஒரு குடியானவன் அவருக்கு அருகில் வந்து உட்கார்ந்தான்.

"என்ன லட்சுமணா, இவ்வளவு நாட்களாகக் கண்ணிலேயே காணுமே! எங்கே போயிருந்தாய்?" என்று ஜமீன்தார் அவனை விசாரித்தார்.

"சீதளபுரம் வரைக்கும் போயிருந்தேனுங்க......"

"அப்படியா? அங்கேதான் நம் ஜஸ்ஸோவுக்குக் கல்யாணம் நிச்சயமாகப் போகிறது."

"கேள்விப்பட்டேன். ஆனால்......"

"என்ன, ஆனால்......?"

"அந்த ஜமீன்தாரிணி அம்மாள் நம்ம குழந்தையைத் தம் மகனுக்குக் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன் என்கிறார்களாமே......!"

"என்ன! ஏன் 'மாட்டேன்!' என்கிறார்களாம்?" என்று பதட்டத்துடன் ஜமீன்தார் கேட்டார்.

"என்னத்தைச் சொல்கிறதுங்கோ...!" என்று இழுத்தான் லட்சுமணன்.

"பயப்படாமல் சொல்லு. என்ன விஷயம்?" என்று கவலையுடனும் ஆவலுடனும் கேட்டார் ஜமீன்தார்.

"எப்படிச் சொல்கிறதுங்கோ? சொல்லக் கூடாத விஷயமுங்கோ!" என்றான் பயத்துடன் பல்லைக் காட்டியவண்ணம் அந்தக் குடியானவன்.

(தொடரும்)

# ஒவ்வொரு தடவையும் வெள்ளையாகிறது

## — ஜாஸ்தி அழுக்குப் படிந்த இடங்கள் உள்பட

உங்கள் ஆடைகள் நீடித்திருக்கும் காலம் ஜாஸ்தி அழுக்குப் படியும் பாகங்களை சலவை செய்யும் முறையைப் பொறுத்திருக்கிறது! ஜாஸ்தி அழுக்குப்படியும் பாகங்கள் அணிவதில் சரீரத்துடன் அதிகமாக உராயும் பாகங்கள்தான் என்பது ஞாபகமிருக்கட்டும்—அதனாலேயே, உங்கள் துணிகளை சிறிது சோப்பைத் தேய்த்து, தண்ணீரில் கரைத்து, அடித்துத் துவைக்கும்பொழுது இந்த பாகங்கள் முதலில் கெட்டுப்போகின்றன.

**உங்கள் துணிகளை ஸன்லைட் முறைப்படிச் சுத்தம் செய்து அடித்துத் துவைப்பதனாலேற்படும் நாசத்தை விலக்குங்கள்.**

ஸன்லைட்டின் ஏராளமான சுயமாக இயங்கிற நுரையை நனைந்த துணியினூடே நன்றாய் புகுத்திக் கசக்குங்கள். அது ஒவ்வொரு தடவையும் வெண்மையாக்குகிறது—அதோடு சேதமின்றி சுத்தமாகச் சலவை செய்கிறது. இச்சுத்தமான சோப், அடித்துத் துவைக்காமலே அழுக்கையகற்றுகிறது; துணிகளை இறகைப் போல் மிருதுவாகச் செய்கிறது; மேலும் உங்கள் கைகளை மென்மையாகவும் மழமழப்பாகவும் வைத்துக் கொள்கிறது.

இது
ஸன்லைட் முறைப்படி
சுத்தம் செய்தது!




# ஸன்லைட் சோப்

S. 81-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 157. மங்கையை மறந்திலாதான்!

சூர்ப்பனகையைப் பார்த்து "உனக்கு இந்தக் கேடு செய்தவர்கள் யார்?" என்று ராவணன் கேட்க அவள் என்ன வெல்லாமோ சொல்லிக்கொண்டு வந்தாள். சீதையின் அழகை வர்ணித்தாள். "நீ அந்தச் சீதையை அடையப் போகிறாய்; மிக்கப் பொருத்தம் தான்!" என்று சொல்லி நிறுத்தினாள்.

ஆனால் அவள் மனசில் இருந்த விஷயமோ வேறு. ராமனுடைய அழகிய உருவந்தான் மனக்கண் முன் நிற்கிறது. மனசில் உள்ள ஆசை அப்படியே வெளி வந்து விடுகிறது. ராமனைத் தனக்குக் கொடுத்துவிட வேண்டும் என்ற வார்த்தை வாய் விட்டும் வந்து விடுகிறது.

பிறகு கொஞ்சம் யோசனை பண்ணினாள். தவறான காரியத்தைச் சொல்லி விட்டதாகவும் மனசில் படுகிறது. பேச்சை வேறு விதமாகத் திருப்புகிறாள். "உண்மையான வாழ்வை நமக்குத் தருவது விதிதான். சந்தேகமே இல்லை! உனக்கும் அப்படித்தான் நேருகிறது. நீ எவ்வளவோ தவம் செய்திருக்கிறாய். ஆனாலும் உன்னை வந்து அடைய வேண்டிய பாக்யம், விதி ஏற்படுத்திய நாளில் தான் வந்து சேரும். மற்றப்படி வந்து சேராது. உனக்குப் பத்து முகம் என்றும், பரந்த மார்பென்றும், இருபது தோள் என்றும் சொல்லிப் புகழ்கிறார்கள். புகழ்வது இதுவரை ஏதோ ஒரு பொருள் பற்றித்தான் — வீரச் செயல்களைக் குறித்துச் சொன்ன புகழ்தான் அவை எல்லாம். இனி அந்தப் புகழுக்குப் பொருள் வேறு" என்று சொல்கிறாள்.

'தருவது விதியேஎன் றல்
தவம்பெரி(து) உடையரே னும்,
வருவது வருநாள்அன் றி,
வந்துகை கூடவற் றே?
ஒருபது முகமும்மார் பும்,
ஓங்குயர் வரையாம்தோள் கள்
இருபதும், படைத்தசெல் வம்
எய்துவ(து) இனியே,எந் தாய்!'

[தவம் பெரிது உடையரேனும்: தவம் பெரிதும் செய்தவர்க்கும்கூட; வற்றே: வல்லதோ; படைத்த செல்வம்: வேறு யாருக்கும் இல்லாதபடி படைத்துக்கொண்ட உனது பாக்யம்.

குறிப்பு:—முத்தாடியும் தழுவியும் அனுபவிக்கக்கூடிய பாக்யத்துக்காகவே பத்து முகங்களும் இருபது தோள்களும் உனக்கு ஏற்பட்டன என்னும் கருத்தலை விஷயத்தைப் பின் இரண்டு அடியும் வெகு வேகத்தோடு பேசுகிறது.]

"இப்படி அழகு வாய்ந்த பெண்ணை உன்னிடம் கொண்டு வந்து கொடுப்பதற்காக எடுக்கப் போனேன். அப்போது, அந்த ராமனது தம்பி, இடையே வந்து வாளால் என் மூக்கை அரிந்துவிட்டான். இனி நான் வாழ்ந்து என்ன பிரயோசனம்? இந்த விஷயத்தை உன்னிடம் சொன்ன பிறகு உயிரை விட்டுவிட வேண்டும் என்று எண்ணி விட்டேன். இந்த அவமானத்தை என்னால் சகித்துக் கொண்டு இருக்க முடியுமா!"

இன்னவள் தன்னைஉன் பால்
உய்ப்பல்என்(று) எடுக்கலுற் ற
என்னை,அவ் இராமன்தம் பி
இடைபுகுந்(து) இலங்குவா ளால்
முன்னைமூக்(கு, அரிந்துவிட் டான்;
முடிந்ததென் வாழ்வு;நின் பால்
சொன்னபின் உயிரைநீப் பான்
துணிந்தவன்' என்னச்சொன் னாள்.

[உய்ப்பல் என்று: கொண்டு வந்து கொடுக்க வேண்டும் என்று; எடுக்கலுற்ற என்னை: தூக்க முயன்ற என்னை; இலங்கு வாளால்: பிரகாசிக்கும் வாளால்; முன்னை மூக்கு அரிந்து விட்டான்: முதலில் மூக்கை அரிந்து விட்டான்; உயிரை நீப்பான்: உயிர் விட.

குறிப்பு:—உயிரை முடித்துக் கொள்வேன் என்று சொல்லுவதெல்லாம் வெறும் ஜம்பம். ராமன்மேல் இருக்கும் ஆசை அவளைத்தான் விட்டபாடாக இல்லையே!]

சீதையைப் பற்றியும், அவள் அழகைப் பற்றியும், காதல் அனுபவங்களைப் பற்றயும் சூர்ப்பனகை பேச ஆரம்பித்தவுடன் காதல் வெறி ராவணனை அப்படியே பிடித்துக் கொண்டது. முன் சொன்னதோ பின் சொன்னதோ ஒன்றுங் காதில் ஏறவில்லை. கரன் இறந்து விட்டான். அவனோடு அவனது சேனைகள் எல்லாம் இறந்துவிட்டன என்ற செய்தியைக் கேட்ட மாத்திரத்தில் எவ்வளவோ கவலை ஏற்பட்டது. ஆனால் அவ்வளவு கவலையுமே மறந்து போய் விட்டது ராவணனுக்கு.

கரனையும் மறந்தான், தங் கை
மூக்கினைக் கடிந்துநின் றான்
உரனையும் மறந்தான், உற் ற
பழியையும் மறந்தான், வெற் றி
அரனையும் கொண்டகா மன்
அம்பினால் முன்னைப்பெற் ற
வரனையும் மறந்தான், கேட் ட
மங்கையை மறந்திலா தான்!

[தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான் உரனையும் மறந்தான்: சூர்ப்பனகையின் மூக்கை அறுத்த மனிதனது துணிச்சலையும் மறந்தான்: வெற்றி அரனையுங் கொண்ட காமன் அம்பினால்: சிவபெருமானையும் வென்றி கொண்ட மன்மதனது அம்பினால்: முன்னைப் பெற்ற வரனையும் மறந்தான்: சம்மதமில்லாமல் எந்தப் பெண்ணையாவது தொட்டால் அழிந்துவிடுவாய் என்று அரம்பை முதலிய தேவலோகத்துப் பெண்களிட்ட சாபத்தையும் மறந்தவனானான்; யார்? கேட்ட மங்கையை மறந்திலாதான்: சூர்ப்பனகை வாயிலாக வருணிக்கக் கேட்ட சீதையை மறக்க இயலாதவனாயிருந்த ராவணன்.]

ராவணன் சகல கலைகளையும் அறிந்தவன். உயர்ந்த லக்ஷ்யங்களை வளர்த்து வந்தவன். சமயம், பக்தி இவைகளில் திளைத்தவன். ஆனாலும் சாம்ராஜ்யத் திமிரினால் அடக்கம் என்பது இல்லாமல் போய்விட்டது அவனிடம். எப்படியோ ஒரு விதமாகக் காதல் வெறியானது இதயத்துக்குள்ப் புகுந்து விட்டது. அதுவும் அடங்காத முறையில் தொழில் செய்ய ஆரம்பித்து விட்டது. இந்த விஷயத்தைச் செய்யுள் அற்புதமான சாயலோடு விளக்குகிறது. கம்பரை இனம் காட்டுகிற கவிகளில் ஒன்று இது.



படித்துப் பார்!

# கிராம ராஜ்யம்

[ஆசிரியர்: கோ. வேங்கடாசலபதி: பிரகாரம்: காந்தி நிகேதன், கல்லுப்பட்டி, மதுரை ஜில்லா; வருட சந்தா: ரூ. 6.]

காந்தி மகானுக்கு மிகவும் பிடித்தமான ஜபங்கள் இரண்டு உண்டு. ஒன்று, ராமஜபம்; இன்னொன்று கிராம ஜபம். அதேமாதிரி மகாத்மாவுக்குப் பிடித்த இராஜ்யங்களும் இரண்டு உண்டு: அவை, ராமராஜ்யமும் கிராமராஜ்யமும்தான். இந்தியா பூரண சுயராஜ்யம் பெற்று விட்ட போதிலும், 'கிராம சுயராஜ்யம்' ஏற்பட்டால்தான் மகாத்மாவின் மனம் குளிரும். கிராம சுயராஜ்யம் என்றால், ஒவ்வொரு கிராமமும் ஒரு சுதந்திர ராஜ்யமாக, — ஒரு தனிக் குடியரசாக, — விளங்கவேண்டும்: தனக்குத் தேவையான பொருள்களை யெல்லாம் தானே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும்; தற்காப்பு உள்பட எல்லா விஷயத்திற்கும் மற்ற கிராமங்களை நம்பியோ எதிர்பார்த்தோ இருக்கக் கூடாது என்பதாகும். எதிர்கால சுதந்திர இந்தியாவிலே ஒவ்வொரு கிராமமும் இத்தகைய சுதந்திர கிராம ராஜ்யமாக இருக்க வேண்டுமென்று காந்திஜி கனவு காண்கிறார். மேற்படி கனவு எவ்வளவு உயர்ந்தது, சிறப்பானது என்பதைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. அந்தக் கனவு நனவு ஆவதிலேதான் கிராமங்கள் இருக்கின்றன. பொதுவாக, உலக நன்மைக்காகப் பாடுபடும் இலட்சியவாதிகளின் கனவுகள் எல்லாம் வெறும் கனவுகளாகவே நின்று விடுவது வழக்கம். ஆனால், காந்திஜியின் கிராம ராஜ்யக் கனவைப் பொறுத்த வரை அது காரியத்திலும் நடை பெறலாம் என்று நம்புவதற்குச் சில ஆதாரங்கள் இருக்கின்றன. அந்த ஆதாரங்களில் ஒன்று இந்த "கிராம ராஜ்யம்" என்னும் பத்திரிகை யாகும். இந்தப் பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ கோ. வேங்கடாசலபதி காந்தி மகானிடத்திலும் அவருடைய கொள்கைகளிலும் பூரண பக்தி விசுவாசம் கொண்டவர். அவருக்கு இந்தப் பத்திரிகை விஷயமாக யோசனை சொல்லி உதவ ஒப்புக் கொண்டிருக்கும் ஒன்பது பேர்களும் ஒவ்வொரு வகை கிராம நிர்மாணத் தொண்டில் ஈடுபட்டு அநுபவம் பெற்ற தேசபக்தர்கள்.

பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தால், ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஒரே கிராம வாசனை கமழ்ந்து கொண்டிருக்கிறது. எல்லா விஷயங்களும் கிராம சம்பந்தமுள்ளவையாகவும் கிராம முன்னேற்றத்துக்கு உகந்தவையாகவும் இருக்கின்றன. பல சிறந்த எழுத்தாளர்கள் விஷயதானம் செய்திருக்கிறார்கள். காந்திஜியின் மனோராஜ்யக் கனவைப் பூர்த்தி செய்வதற்காக வெளிவந்திருக்கும் இந்தக் "கிராம ராஜ்ய"த்துக்குத் தமிழ் மக்கள் நிச்சயம் நல்ல ஆதரவு அளிப்பார்கள்.

# மாட்டுப் பெண்கள்!

விதூஷகன்

ஒற்றுமைக்கு உபமானம் சொல்லும்போது 'நகமும் சதையும்', 'மலரும் மணமும்' என்கிறோம். அதுபோல ஒற்றுமையின்மைக்கு உபமானம் சொல்லுகையில் 'எலியும் பூனையும்' 'கீரியும் பாம்பும்' என்ற வரிசையில் 'மாமியாரும் மாட்டுப் பெண்ணும்' என்றும் சேர்த்துக் கொள்ளலாம்!

'மாட்டுப் பெண்' என்று சொல்லும்போது எனக்கு ஒரு சிறிய சந்தேகம் தோன்றுவதுண்டு. சிறிய சந்தேகங்கள் தானே கடைசியில் பெரிய சர்ச்சைகளில் கொண்டு வந்து விட்டு விடுகின்றன! மாட்டுப் பெண் என்று சில இடங்களிலும் நாட்டுப் பெண் என்று சில இடங்களிலும் பார்க்கிறோம். இவற்றில் எது சரி? மாட்டுப் பெண் என்பதின் மற்றொரு ஜோடிப் பதத்தை எடுத்துக் கொண்டு ஆராய்ந்து பார்த்தால் மாப்பிள்ளை என்று சொல்லுகிறோமே தவிர, நாப்பிள்ளை என்று சொல்லுவதில்லை! மாற்றுப் பிள்ளை — மறு பிள்ளை — மறு(று) மகன் — அதாவது மகனுக்குச் சம அந்தஸ்தில் வைக்கப்பட வேண்டியவன் (உண்மையில் மகனைவிட அதிகமான அந்தஸ்தில்தானே வைக்கிறோம்!) என்பதால் — மாப்பிள்ளை என்று மருவி வழங்கப் படுகிறான்! அதைப்போலவே மாற்றுப் பெண்—மாட்டுப்பெண் என்று திரிந்திருக்க வேண்டுமென்பது என் அபூர்வமான ஆராய்ச்சிகளில் ஒன்று! நாட்டுச் சர்க்கரை, நாட்டு வேஷ்டி என்கிறமாதிரி 'நாட்டுப் பெண்' என்பதனால் 'சீமைப் பெண்' என்று வேறு இருக்கிறதாக ஆகிறதல்லவா?

இவ்வளவு ஆராய்ச்சிக்குரிய இந்த 'மாட்டுப் பெண்'—மாட்டுப் பெண்ணாக மாறுவதற்கு முன்னால் எத்தனையோ ஆராய்ச்சிகளுக்குப் பாத்திரமாகிறாள். பிள்ளையைப் பெற்றவர்கள் — பிள்ளைக்கு உறவினர்கள் — பிள்ளைக்கு வேண்டியவர்கள் — வேண்டாதவர்கள் — இதர அநாமதேயங்கள் — பிறகு சாக்ஷாத் பிள்ளை — இவர்கள் ஒவ்வொருவரும் பெண்ணைப் பார்த்து, "பெண் கண்ணுக்குப் 'பங்கடை'யில்லை! சுமாராய் இருக்கிறாள்!", என்று தங்கள் ஏகமனதான அபிப்பிராயத்தைக் கலியாண மகாசபையில் நிறைவேற்றியாக வேண்டும். அதற்குப் பிறகு பிள்ளை வீட்டாரால் நடத்தப்படும் 'மாட்ரிமோனியல் டெஸ்ட்'டில் குறைந்த பக்ஷம் இரண்டாங் கிளாஸிலாவது பாஸ் பண்ண வேண்டும். "படிக்கத் தெரியுமா? பாட்டு வருமா? நாட்டியம்...?" என்று சரமாரியாகக் கேள்விகள் கிளம்பும். அவர்கள் கேட்பது என்னவோ படிப்பையும், சங்கீதத்தையும், நடனத்தையும் பற்றிய கேள்விகள்தான்; கலியாணமான பிறகு மாட்டுப் பெண்கள் 'அகராதி' படித்து, வாயில் வந்தபடி பாடு பாடென்று பாடி, நடமடிப்பதைக் குறித்து அல்ல!

பெற்றோர்கள் 'ஹை கமாண்டில்' பொருளாதார விவாதங்கள் முடிவு பெறுதல் — சம்பந்திகள் கூடிச் சீர்வகையறாக்களை எப்படிச் சீராகச் செய்வது என்பது பற்றி வாதப் பிரதிவாதங்கள் செய்து குளறுதல் — சிறுசுகள் — அதாவது, பையனும் பெண்ணும் லௌகிக முறையில் பேசிப் பழகுதல் — இதெல்லாம் ஆகவேண்டும்!

"அம்மாமிக்கு என்ன குறைச்சல்? ஆச்சு, மாட்டுப் பெண் வரப்போறா! இன்னமே அக்கடான்னு கிடக்கலாம்!" என்று அம்மாமியை விசாரிக்கிறார்கள். அம்மாமியும் தலைகொள்ளாத சந்தோஷத்தால் பூரித்துப் போகிறாள். "கஷ்டம் விடிந்தது! அடுப்பங்கரை உத்தியோகத்திற்கு 'ரிலீவர்' வரப்போகிறாள்!" என்று அகமகிழ்கிறாள். ஆனால், என்ன ஏமாற்றம்! மாட்டுப் பெண் வந்த பிறகு அம்மாமியின் கஷ்டம் அதிகரிக்கிறது. இன்னும் ஒரு ஆசாமிக்குக் கூடச் சமையல், பிள்ளை முன் போல இல்லை என்ற குறை, தன்னைப் பற்றிப் பிள்ளையிடம் குறை சொல்லுகிறாள் என்ற ஆத்திரம், கோவில் குளத்திற்குப் போகவொட்டாமல் சாயந்திர நேரத்தில் பிள்ளையையும் அழைத்துக் கொண்டு சினிமாவிற்குப் போய்விடுகிறாள் என்ற குரோதம் இதெல்லாம் வந்து விடுகிறது!

"எதிரும் புதிருமா இப்படி உட்கார்ந்திருந்தா யாராலே பிருக்குடி செய?" என்று எரிந்து விழுகிறாள். "எங்க நாளிலே இந்த மாதிரி இல்லேடியம்மா!" என்று அசோகனுடைய கல்வெட்டுச் சாஸனத்தைக் கொண்டு வந்து

காட்டுகிறாள். "சை! நீங்களெல்லாம் பொம்மனாட்டிகளாட்டமா!" என்று கன்னத்தைத் தோளில் இடித்துக்கொள்ளுகிறாள். இந்தக் கூக்குரல்களுக்குப் பிள்ளையாண்டான் செவி சாய்க்காமற் போனால் "பிள்ளைக்கு மருந்திட்டு விட்டானடி!" என்று குதிக்கிறாள். இதையெல்லாம் மனதிலே வைத்துக்கொண்டு மாட்டுப் பெண்ணுடைய மூன்று தலைமுறையைச் சந்திக்கு இழுக்கிறாள்! "உங்கப்பன் என்னத்தைச் செஞ்சான்?" என்று ஏக வசனத்தில் இடித்துக் காண்பிக்கிறாள்! "என் பிள்ளையைப் போல மூன்று லோகத்திலேயும் உண்டோடி! மாணிக்கம் என்றால் மாணிக்கம்தான் அவன். இந்த அஷ்ட தரித்திரத்தைத் தேடி அவசரப்பட்டு இருக்கவே வேண்டாம்! லட்சம் ஜாதகம் வந்து போன வருஷம், அவன் கொடுத்து வச்சது அவ்வளவுதான்!" என்று பெருக்கல் வாய்ப்பாடு மாதிரி பின்னிப் பின்னி இழுக்கிறாள்! பெண் வீட்டிலும் இப்படித்தான் "கிளியை வளர்த்துப் பூனையின் கையில் கொடுத்து விட்டோமே!" என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

மாட்டுப் பெண் ஒவ்வொரு தடவையும் பிறந்தகம் போய் வரும்போது ஏதாவது சீர்வகை, பக்ஷணங்கள் செய்து கொண்டு வரவேண்டுமென்று பிடிவாதம் செய்கிறாள் மாமியார். விஷமியான மாட்டுப் பெண் ஒவ்வொரு தடவையும் 'மாமியார் கிழம்' தின்ன முடியாதபடி அசல் 'கூழாங்கல் பிராண்டு' பொருவிளங்காய் உருண்டையை மட்டும் அரசப் பிரதக்ஷணத்திற்குப் போடும் அளவு கொண்டு வருகிறாள்.

மாமியார்-மாட்டுப் பெண் ரகளையைப் பார்த்தால் தொழிலாளிக்கும் முதலாளிக்கும் நடக்கும் போராட்டம் கூடத் தேவலை என்றாகி விடும்!

**மா**மியார்கள் என்னவோ பொல்லாதவர்களாயிருக்கலாம். இருந்தாலும் மாமியார்களும் மாட்டுப் பெண்களும் ஏதாவது 'எலக்ஷ'னுக்கு நின்றால் என்னுடைய 'வோட்' மாமியார்களுக்குத்தான்! இப்படி என்னுடைய அபாரமான கருணைக்குப் பாத்திரமான மாமியார்களுக்கு ஒரு யோசனை:

உங்கள் மாட்டுப் பெண் நீங்கள் சொல்கிறபடி நடப்பது கிடையாதா? சமையல் செய் என்றால் முணுமுணுக்கிறாளா? சரிதான்: அவளைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்கத் தெரியவில்லை உங்களுக்கு! 'தட்டிக் கொடுத்து' என்றால் முதுகிலோ தலையிலோ தட்டி விடாதீர்கள்! அப்புறம் ஆபத்துத்தான்!

எப்படியாவது முதல் முதல் ஒருநாள் சமைக்கச் சொல்லிவிடுங்கள். அவள் 'கண்டா முண்டா'வென்று எதையாவது சமைத்து வைப்பாள். அதற்காக நீங்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. சாப்பாடெல்லாம் ஆன பிறகு உங்கள் பிள்ளையிடம் போய், மாட்டுப் பெண் காதில் விழும்படியாக இரைந்து, "அடேய்! இன்றைக்கு அவள் சமையலடா! கறியும் குழம்பும் எவ்வளவு உசத்தியாயிருந்தது, பார்த்தியாடா? என்னதான் சொன்னாலும் அவள் சமையலில் அலாதி கெட்டிக்காரிதாண்டா!" என்று புகழ்ந்து கொண்டாடுங்கள்! ஆனால் "அவள் சமையலா அம்மா, இன்றைக்கு? அதுதான் சாப்பிட்டதிலேருந்து வயிற்றை என்னவோ செய்கிறது!" என்று ஹாஸ்யம் ததும்பப் பேசுவதாக நினைத்துக்கொண்டு உங்கள் பிள்ளையாண்டான் தத்துப் பித்தென்று ஏதாவது பேத்த ஆரம்பித்துவிடப் போகிறான்! ஜாக்கிரதை!

நீங்கள் இப்படி 'தட்டிக் கொடுத்தே' எல்லாக் காரியங்களையும் சாதித்துக் கொள்ளலாம். ஒழிந்தபோது அவளுடன் 'கேரம்' ஆடுங்கள். ஓஹோ! உங்களுக்கு அது தெரியாதோ! பரவாயில்லை: பல்லாங் குழியாவது ஆடித் தொலையுங்கள்!

இப்படியெல்லாம் மாட்டுப் பெண்களைக் காக்காய் பிடித்தால்தான் உங்களுக்குச் சௌகரியம். இல்லாவிட்டால் அதோகதிதான்! மாட்டுப் பெண்கள் சங்கம் கூடுவார்கள். தீர்மானங்கள் நிறைவேற்றுவார்கள். "மாமியார்கள் ஒழிக!" என்று கொடியைப் பிடித்துக் கொண்டு ஊர்வலம் வருவார்கள்! 'அகில இந்திய மாட்டுப் பெண்கள் சம்மேளன'த்தின் வாயிலாக 'ஸ்ட்ரைக் நோட்டீஸ்' நீட்டுவார்கள். அப்புறம் நீங்கள் இருக்கும் அறை வாசலில் "மாமியார் ஜாக்கிரதை!" என்று போர்டு எழுதி மாட்டினாலும் மாட்டி விடுவார்கள்!

ஆனால், பாவம்! என் யோசனை மாமியார்களுக்குப் பிரயோசனப்படப் போவதில்லை. ஏனென்றால் நான் இந்த யோசனையைக் கூறுவதற்கு முன்னால், "மாட்டுப் பெண்கள் படிக்கக்கூடாது!" என்று குறிப்புக் கொடுக்க மறந்துவிட்டேன். ஆகவே, இதற்குள் எல்லா மாட்டுப் பெண்களும் என்னுடைய யோசனையைப் படித்திருப்பார்கள்! நான் என்ன செய்வது? மாமியார்களின் அதிர்ஷ்டம் அவ்வளவுதான்!



# காலக்ஷேபம்



## நியாயம்தான்!

ஜவுளிக் கடைக்கு முன்பு 'க்யூ'வில் நிற்பவர் (தன் பின்னால் நிற்பவரைப் பார்த்து):— ஏன் ஸார், என் முதுகைச் சுரண்டுகிறீர்?

பின்னால் நிற்பவர்:— எனக்கு ரொம்ப தாகமாக இருக்கிறது. அதோ அந்தக் குழாயில் தண்ணீர் குடித்துவிட்டு வருகிறேன். நான் திரும்பி வந்தால் எந்த இடத்தில் நிற்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக உங்கள் முதுகில் கரிக்கட்டியால் ஒரு கோடு கிழித்திருக்கிறேன். வேறு ஒன்றுமில்லை, ஸார்!

—என். என்.



## அதுவே போதும்!

புருஷன் (மனைவியிடம்):— ரேஷன் கடைக்குப் போகிறேன். ஏதாவது சாக்குப் பை இருந்தால் கொடு. சாமான் வாங்கிவர!

மனைவி:— சாக்குப் பை என்னத்துக்கு? இதோ இந்த அஞ்சறைப் பெட்டியை எடுத்துப் போங்கள். நமக்கு வருகிற ரேஷன் சாமான் இதற்கு மேலா வந்துவிடப் போகிறது?

—கா. கி.



## உண்மைதான்

தகப்பனார் (தன் மகன் அலாரம் வைத்திருப்பதைப் பார்த்து):— ஏய், தினமுந்தான் அலாரம் வைக்கிறாய். ஒரு நாளாவது எழுந்ததுண்டா?

மகன் (சாமர்த்தியமாக):— ஏனில்லை? எழுந்துதானே அதை நிறுத்துகிறேன்!

—எம். பி. சம்பந்தன்.



## அவனுடைய காலண்டர்!

சேட்டு:— என்னடா ராஜு! இன்றைக்குத் தேதி என்ன?

ராஜு:— இரு; என் மணிபர்சைப் பார்த்துச் சொல்லுகிறேன்.

—வி. என். சுப்பையா.

## தெரியாது!

மனைவி:— நம் வேலைக்காரியை அனுப்பி விட்டால் அண்டை வீடுகளில் உள்ளவர்கள் நம்மைப் பற்றி என்ன பேசிக் கொள்வார்கள்?

புருஷன்:— வேலைக்காரி போன பிறகு அவர்கள் பேசிக் கொள்வதுதான் நமக்குத் தெரியப்போவதில்லையே?

—பி. பி. எஸ். மணியன்.



## ஒரே வழி

நாடக ஆசிரியர்:— நான் எழுதியிருக்கும் நாடகத்தை நீங்கள் உபயோகித்துக் கொள்ள முடியாதா?

நாடக மானேஜர்:— அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது............

நா. ஆ.:— அது என்னவோ?

நா. மா.:— நாடகம் முடியும்போது புஷ்பமாரி பொழியும் அல்லவா? அதற்கு இதைக் கிழித்து உபயோகப்படுத்திக் கொள்ளலாம்!

—ஜே. சக்கரவர்த்தி.



## சரிதான்!

ஒருவர் (பிச்சைக்காரனைப் பார்த்து):— என் அப்பா, இந்த ரேஷன் நாளில் நாயையும் குரங்கையும் கட்டிக்கொண்டு கஷ்டப்படுகிறாயே, அவற்றுக்கு நீ எப்படி சாப்பாடு போட முடியும்? உன் சாப்பாட்டில் அல்லவா எடுத்துப் போட வேண்டும்?

பிச்சைக்காரன்:— நல்லாச் சொன்னீங்க! நாயாலும் குரங்காலும்தானே எனக்குச் சாப்பாடு கிடைக்கிறது?

—ஜி. முத்துகிருஷ்ணன்.



## அப்பா சொற்படி!

தகப்பனார்:— என்னடா பயலே, நேற்றுத் தான் புஸ்தகம் வாங்கித் தந்தேன். அதற்குள் தொலைத்துவிட்டாயே!

மகன்:— நீதானே அப்பா, நேற்று நான் புஸ்தகம் வேண்டும் என்றபோது 'வாங்கித் தொலைக்கிறேன்!' என்று சொன்னாய்?

—"சுப்பு"

# கண்டக்டர் கந்தப்பன்

மணியம்

**வேம்பு**



**வ**ளைந்து வளைந்து செல்லும் மேட்டுப்பாளையம் மலை ரஸ்தாவில் நீலகிரிக்குச் செல்லும் பஸ் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. சாலையின் இருபுறமும் அடர்ந்த மரங்களும், கண்ணுக்கெட்டிய தூரம் வரை நீல நிறமுடைய மலைச் சிகரங்களும் பார்ப்பதற்கு மிக ரம்மியமா யிருந்தது.

வேகமாகச் செல்லும் பஸ்ஸின் ஓசையும், கண்டக்டர் கந்தப்பன் பஸ்ஸின் வாயிலருகில் நின்றுகொண்டு சிறிது நேரத்திற் கொருதரம் ஏதாவது ஒரு பாட்டின் அடியை முணுமுணுக்கும் சத்தமும், மாறி மாறி ஒலித்துப் பஸ்ஸி லுள்ளவர்களை அமைதியி லாழ்த்தியது.

"ஆற்றோரம் கொடிக் காலாம்
அரும்பரும்பாய் வெத்திலையாம்
போட்டா செவக்குதில்லே
பெண்மயிலே உன் மயக்கம்!"

என்ற பாட்டில்தான் கந்தப்பனுக்கு அலாதிப் பிரியம். அதுவும் சாலையிலே தண்ணீர் எடுத்துவரும் பெண்களைத் தாண்டிப் பஸ் செல்லும்பொழுது அவனுக்குக் 'குஷி' தாங்காது. மேற்படி பாட்டின் அடிகளை உரக்கப் பாடுவதும் சீட்டி அடிப்பதுமாகச் செல்வான்.

வாழ்க்கையில் எவ்வளவோ பொருள்கள் மீது அவன் தன் உயிரையே வைத்திருந்தான். அவைகளெல்லாம் அவனை ஏமாற்றி விட்டன. ஆனால் பஸ் கண்டக்டர் உத்தியோகமும் இந்தத் தெம்மாங்குப் பாட்டும் அவனை ஏமாற்றாது என்று அவனுக்கு நிச்சயமாகத் தெரியும்.

அந்தக் கண்டக்டர் குல்லாவையும், தோல் பையையும் மாட்டிக் கொண்டவுடனே அவனுக்குக் குஷி பிறந்து விடும். 'ரைட்'—'ஹோல்டான்' என்று கூவி சீட்டி யடிப்பதில் இருக்கும் சந்தோஷத்தைப் போல் அவனுக்கு வேறொன்றிலும் இருப்பதில்லை. அவன் என்ன பண்ணுவான், பாவம்! பழைய எண்ணங்களை — வாழ்க்கையின் தோல்விக் கோடுகளை — மறப்பதற்காகத்தான் இந்த வேஷம் போட நேரிட்டது.

## 2

**நா**ன்கு வருடங்களுக்கு முன்பு கந்தப்பன் கண்டக்டராக இல்லை. திருச்சி ஜில்லாவில் காவேரி யாற்றங் கரைக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்தில் பிறந்தவன் அவன். வேகமாக ஓடும் காவேரியில், சுற்றி ஓங்கி வளர்ந்திருக்கும் ஆலமரக் கிளைகளிலிருந்து 'தொப்'பென்று குதித்து நேரம் போவதே தெரியாமல் நீந்தல் அடித்துக்கொண்டு காலங் கழித்தவன் அவன்.

சிறு வயதிலேயே அவன் தந்தை இறந்து விட்டார். பிறகு அவன் தாயார் கந்தப்பனுடன், தன் தம்பியின் வீட்டிற்கு வந்து விட்டாள். முகங் கோணாமல் சகோதரிக்குப் பணிவிடை புரிவதில் கந்தப்பனின் மாமனான மாணிக்கம் கெட்டிக்காரன். செங்குளம் கிராமத்திலே அவனுக்குக் கொஞ்சம் சொத்தும் இருந்தது. வழக்கம்



போல் அவனுக்கு ஒரு பெண்ணும் இருந்தாள்.

தங்கம் என்ற பெயருக்கேற்ப அவள் குணத்திலும் அழகிலும் தங்கமாக விளங்கினாள். தங்கம், கந்தனுக்குத்தான் என்று எல்லோரும் முடிவுசெய்து வைத்திருந்தனர்.



கந்தப்பன் சிறு வயதிலிருந்தே யாருக்கும் அடங்காதவன். தன்னுடைய இஷ்டம்போல் சுயேச்சையாக வாழ வேண்டும் என்ற எண்ணமுடையவன். காலையில் எழுந்து சென்றால் காவேரியில் கொட்டம் அடித்து விட்டு உச்சி வேளைக்குத்தான் திரும்பி வருவான்.

அவனைக் காவேரிக் கரையில் காணநேரும்போதெல்லாம், "கந்தப்பா! என்னுடன் கொஞ்சம் வயலுக்கு வந்து வேலை கத்துக்கோடா!" என்று மாணிக்கம் கெஞ்சுவான்.

"எனக்கு ஏன் மாமா, நிலமும் நீச்சும்? நல்லா உழுது பயிரிட்டுத் தங்கத்தோடு நிலபுலன்களையும் எனக்குச் சேர்த்துக் கொடுத்துடுங்க!" என்பான் கந்தப்பன்.

"சரி, அப்படியே செய்கிறேன். ஆனால் நாளைக்கு நிலத்தை எப்படிக் காப்பாத்திக்கிறது என்கிறதை இப்பவே நீ கொஞ்சமாவது தெரிஞ்சிக்க வேண்டாமா?" என்று மாணிக்கம் மேலே சொல்வதற்குள், கந்தப்பன் 'தொப் தொப்' பென்று காவேரியில் குதித்துக் கொண்டே இருப்பான்.

கந்தப்பன் குளிக்கும் இடத்துக்குத் தண்ணீர் எடுக்க யாரும் வரமாட்டார்கள். ஆனால் தங்கம் மட்டும் குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு தைரியமாக அந்த இடத்துக்குத்தான் தண்ணீர் எடுக்க வருவாள். அவளைக் கண்டால் கந்தப்பனுக்குச் சிம்ம சொப்பனம்தான்! சட்டென்று கரையேறி ஆலமரத்தின் மறைவில் நின்றுகொண்டு அவள் தண்ணீர் எடுக்கும் எழிலைப் பருகிவிட்டுப் பிறகுதான் அவ்விடத்தை விட்டுச் செல்வான்.

சிலசமயம் தங்கம், "ஏன் அத்தான், என்னைக் கண்டவுடன் கரையேறிப் போயிடறே?" என்று சிரித்துக் கொண்டே அவனைக் கேட்பாள்.

சுத்த வாயாடித்தனமாக மற்றவர்களுக்குப் பதில் சொல்லும் கந்தப்பனுக்கு இந்த இடத்தில் வாயடைத்து விடும். "உம்... உம்!" என்று ஏதாவது பேச எத்தனிப்பான். ஆனால் ஒரு வார்த்தையாவது வெளியில் வராது.

"ஏண்டா, கந்தப்பா! இப்பொவே அவள் அழகில் மயங்கிக் கட்டுண்ட ஸர்ப்பம்போல் ஆகி விடுகிறாயே, அவளைக் கல்யாணம் செய்து கொண்டு நீ எப்படி காலத்தைக் கழிக்கப் போகிறாய்!" என்று கேலியாகக் கேட்பவர்களுக்கெல்லாம் கந்தப்பனிடமிருந்து ஒரு அசட்டுச் சிரிப்புத்தான் பதிலாகக் கிடைக்கும்.

"கந்தப்பா! மாமாவோடே ஒத்துமையா போடா! நாளைக்கு நான் கண்ணை மூடிட்டா உனக்கு அவன் தாண்டா ஆதரவு!" என்று கந்தப்பனை அருகே உட்கார வைத்துக் கொண்டு அவன் தாயார் கூறுவாள். ஆனால் கந்தப்பனோ, அம்மா திரி சமயங்களில் எல்லாம் அவள் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் காவேரிக் கரையிலுள்ள தோட்டங்களிலிருந்து மாங்காயைத் 'தேட்டை' போடலாமா, தேங்காயைத் 'தேட்டை' போடலாமா என்று யோசித்துக் கொண்டிருப்பான்!

## 3

காலம் மாற மாற உலகில் பல மாறுதல்கள் ஏற்படுவதுபோல் செங்குளத்திலும் சில மாறுதல்கள் தோன்றிக் கொண்டு வந்தன. தங்கம், மாலை வேளையிலே உருக்கிய தங்கமென மின்னும் பொன்னியாற்றைப்போல் பூரண எழிலுடன் விளங்க ஆரம்பித்தாள். அவளுக்கு வயது வந்தவுடன் கட்டுப்பாடும் பிறந்து விட்டது. கந்தப்பனின் போக்கு வரவர மாணிக்கத்துக்குப் பிடிக்கவில்லை.



ஒரு சமயம் அவன் ஏதோ அவசர வேலையாக வெளியூருக்குப் போக எண்ணிக் கந்தப்பனைக் கூப்பிட்டு, "இன்னிக்குக் கொஞ்சம் வயலுக்குப் போய் வேலைக்காரனுங்க சரியாய் உழுறாங்களான்னு பார்த்துக்கோ!" என்றான்.

"போ, மாமா! இதுதான் எனக்கு வேலையா? அதெல்லாம் உங்க தலைமுறையோடு இருக்கட்டும்!" என்று அலட்சியமாகக் கூறிவிட்டு வழக்கம் போல் காவேரிக் கரைக்குப் போய் விட்டான் கந்தப்பன்.

அதிலிருந்தே கந்தப்பனின்மேல் மாணிக்கத்துக்குக் கோபம் வளர ஆரம்பித்தது. தன் தமக்கையிடம் சொல்லி அவனைத் திருத்தும்படி சொன்னான். ஆனால் கந்தப்பனின் போக்கைக் கட்டிப் பிடிக்க ஒருவராலும் முடியவில்லை. அவன் தீய வழிகளில் செல்லாவிடினும் யாருக்கும் பயப்படாத அவனுடைய குணத்தால் 'தத்தாரி' என்ற பெயரை வெகு சீக்கிரமே வாங்கி விட்டான்.

ஒரு நாள் தன் தமக்கையை நோக்கி, "ஏன் அக்கா! கந்தனுக்குச் சொந்த வேலைதான் பிடிக்கவில்லை; வேறே எங்கேயாவது வேலைக்கு அனுப்புகிறது தானே!" என்றான் மாணிக்கம்.

"நீதான் அவனுக்குத் தங்கத்தைக் கட்டிக் கொடுத்து வீட்டோடு வைச்சுக்கப் போறியே, அவனுக்கு வேறே வேலை எதற்கு? எல்லாம் போகப் போகச் சரியாய்ப் போய்விடும். கால் கட்டுக் கட்டிப் போட்டு விட்டால் அவன் தானாகவே சொந்த வேலையைக் கவனித்துக் கொள்வான்!" என்றாள் கந்தனின் தாயார்.

"அவன்தான் சுத்தத் தத்தாரியா ஊரைச் சுத்திக்கிட்டு வாரானே, அவனுக்கா தங்கத்தைக் கொடுப்பது?" என்று அத்தனை நாளும் தன் உள்ளத்தில் அடக்கி வைத்துக் கொண்டிருந்த எண்ணத்தை அன்று வெளியிட்டு விட்டான் மாணிக்கம்.

இது அவன் தமக்கையின் உள்ளத்தைப் பெரிதும் வாட்டியது. "தனக்குப் பிறகு தன் மகனின் கதி என்ன ஆகுமோ?" என்று எண்ணி அவள் ஏங்க ஆரம்பித்து விட்டாள்.

தங்கத்தின் உள்ளத்தை யாராலும் அறிய முடியவில்லை. அநேகமாக அவள் கந்தப்பனைத்தான் காதலிக்கிறாள் என்பது, வாரம் ஒரு தரமாவது ஆற்றங்கரைக்கு மாலை வேளையிலே ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி விட்டுப் போய் வருவதிலிருந்து தெரிந்தது.

கந்தப்பனின் நினைவெல்லாம் தங்கத்தின்மேல்தான். ஆனால் காலம் ஒரே மாதிரி யிருக்கிறதா? திடுதிப்பென்று கந்தப்பனின் தாயார் கண்ணை மூடி விட்டாள். கந்தப்பன் தனிக் காட்டு ராஜாவாகி விட்டான். எங்கேயாவது சாப்பிடுவது, எங்கேயாவது தூங்குவது, காவேரியில் குதிப்பது என்று காலத்தைத் தள்ளிவந்தான்.

மாணிக்கம் தன் தமக்கை இறந்த பிறகு கந்தப்பனை லக்ஷ்யம் செய்வதேயில்லை. "அது கிடக்குது, தத்தாரி!" என்று தள்ளிவிட்டுத் தன் பெண்ணுக்கு வேறு வரன் பார்க்கத் தொடங்கினான்.

தங்கத்துக்குக் கல்யாண ஏற்பாடு நடக்கிறது என்பதை யறிந்தவுடன் கந்தப்பனுக்குக் கோபம் பொங்கியது. "ஏன் மாமா! அத்தான் முறை நான் இருக்கச்சே, தங்கத்துக்கு வேறே புருசன் தேடுறீங்களாமே!" என்று கேட்டதற்கு, அவனுக்குக் கிடைத்த பதில் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளப்பட்டதுதான்!

"எப்படியானாலும் தங்கத்தைத் தவிர வேறு யாரையும் மணப்பதில்லை" என்று வீராப்பு பேசிச் சென்றான் கந்தப்பன். ஆனால் அவனது வீராப்பு அவனுடனேயே இருக்க வேண்டியதாயிற்று. கந்தப்பனைக் கூப்பிடாமலேயே தங்கத்துக்குக் கல்யாணம் நடந்தேறியது. மணமகன் அழைத்துக் கொண்டு செல்லும் தினத்தன்று கந்தப்பன் ஏதோ கொஞ்சம் கலாட்டா பண்ணினான். ஆனால் தங்கம் அவன் முகத்தைக்கூட ஏறிட்டுப் பார்க்காமல் தலையைக் குனிந்து கொண்டேயிருந்ததால் கந்தப்பன் தப்பாக எண்ணிக் கலாட்டா பண்ணுவதை நிறுத்தி விட்டு எங்கேயோ போய்விட்டான்.

4

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு கந்தப்பன் காவேரிக்கரையில் 'தொப்' 'தொப்' பென்று குதிப்பதில்லை. ஏதோ கிலி பிடித்தவன் போல் எங்கேயாவது உட்கார்ந்திருப்பான். அப்பொழுது அவன் மனதில் பழைய எண்ணங்கள் தோன்றும். தன் தாயார், "மாமனுடன் சகஜமாகயிருக்கச் சொன்னாளே, இள வேகத்தில் அந்த புத்தி நமக்குப் பைத்தியக்காரத்தனமாகப் பட்டதே!" என்று எண்ணும்போது, அதுவரை கலங்கியறியாத அவன் கண்களிலும் கண்ணீர் ததும்பும்.

"'நான் கண்ணை மூடி விட்டால் உனக்கு யார் ஆதரவு?' என்று அவள்

அன்று சொன்னபடிதானே இப்பொழுது ஆகிவிட்டது!" என்று எண்ணி எண்ணி அவன் மனம் புண்ணாயிற்று.

பணமின்றி வாழ்க்கையை நடத்துவது கடினம் என்ற புத்தி வந்ததும் அவனுக்குச் செங்குளத்து வாழ்க்கையே பிடிக்கவில்லை. தலை வணங்காது புரளப் புரள வேஷ்டி கட்டிக் கொண்டு ஊர் சுற்றிக் கொண்டிருந்த கந்தப்பன் ஒரே மாதத்தில் மாறி விட்டதை அறிந்த அந்த ஊரார் ஆச்சரியப்பட்டனர்.

இருந்தாற்போல் இருந்து திடுதிப்பென்று கந்தப்பன் ஒரு நாள் அந்த ஊரை விட்டே மறைந்துவிட்டான். அவனுக்காக அந்த ஊரில் யாரும் வருந்தவில்லை. மாணிக்கம்கூட, "தத்தாரி! எங்கே யாவது ஊர் சுத்தப் போயிருக்கும்!" என்று சும்மாயிருந்து விட்டான்.

செங்குளத்தில் மறைந்த கந்தப்பன் எங்கெங்கோ சுற்றிக் கடைசியில் கோயமுத்தூர் வந்து சேர்ந்தான். அங்குதான் அவனுக்குக் கண்டக்டர் வேலை கிடைத்தது. அவனைப் பார்த்தவுடனேயே அவன் மேல் அலாதிப் பிரியம் வைத்து விட்டான் டிரைவர் முத்துசாமி. அவன் தன் எஜமானனிடம் சொல்லித் தான் ஓட்டும் 'நீலகிரி—மேட்டுப்பாளையம்' பஸ்ஸிலேயே அவனுக்குக் கண்டக்டர் வேலை வாங்கிக் கொடுத்து விட்டான்.

கந்தப்பனின் களை சொட்டும் அழகும் இளம் வயதும் முத்துசாமியைக் கவர்ந்தன. தன் பெண்ணுக்கு ஏற்ற மாப்பிள்ளை என்று குருட்டுக் கனவு காண ஆரம்பித்து விட்டான். ஆகவே, கந்தப்பனை மரியாதையாகவும் சொந்தப் பிள்ளையைப் போலும் நடத்தி வந்தான். அதற்கேற்றாற் போல் கந்தப்பனும் "மாமா!" என்றே முத்துசாமியை அழைத்து வந்தான்.

சில சமயம் முத்துசாமி, கந்தப்பனைத் தன் வீட்டுக்குச் சாப்பிட அழைத்துச் செல்லுவதுண்டு. அம்மாதிரி சமயங்களில் தன் பெண்ணை வந்து பரிமாறச் சொல்லுவான் முத்துசாமி. நாணிக் கோணிக் கொண்டு வந்து பரிமாறும் அவனுடைய பெண் கோமதியைக் கந்தப்பன் தன் தங்கையாகப் பாவித்தான். ஆனால் கந்தப்பனின் அழகில் மயங்கிய கோமதியோ அவனைத் தன் காதலனாகப் பாவித்தாள்!

ஒரு நாள் மாலை மணி ஐந்திருக்கும். நீலகிரி அடிவாரத்தில் பஸ் வேகமாக வந்துகொண்டிருந்தது. வழியில் அது பல சிறு கிராமங்களைத் தாண்டிச் செல்ல வேண்டும். கந்தப்பன் தினசரி அந்தக் கிராமங்களில் ஒன்றில் யாரையோ கவனித்துக் கொண்டு வந்தான். அந்த உருவம் கண்ணுக்கு மறையும் வரை கந்தப்பன் பஸ்ஸில் இருந்தபடி கண் கொட்டாது எட்டிப் பார்த்துக் கொண்டே இருப்பான். அவன் உதடுகள், "தங்கம் போல்தானிருக்கிறது...... நாளைக்குப் பார்க்கலாம்!" என்று முணுமுணுக்கும்.

மேட்டிலிருந்து பள்ளத்திற்குப் போக வேண்டியிருப்பதால் பஸ் கன வேகத்தில் போகும். முத்துசாமி கந்தப்பனைச் சந்தோஷப் படுத்துவதற்காகப் பஸ்ஸை இன்னும் வேகமாக ஓட்டுவான்.

அன்று பஸ் வேகமாக வந்து கொண்டிருந்தது. தெம்மாங்கு மிகவும் உச்சஸ்தாயியில் ஒலித்தது. பஸ்ஸும் வேகமாகச் சென்றதினால் கந்தப்பனின் குஷி அதிகமாகியது. பிரயாணிகளுக்கெல்லாம் அந்த இடத்தில் குடல் நடுக்கந்தான். அந்தக் கிராமம் வருமுன்பே மிகவும் ஓரத்தில் நின்றுகொண்டு எட்டிப் பார்த்துக் கொண்டு வர ஆரம்பித்தான் கந்தப்பன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் எதிர்பார்த்த அந்த உருவமும் கண்ணில் பட்டது. "ஆமாம், அவள் தங்கந்தான்! இன்று பாதி வழியிலேயே அவளைச் சந்தித்து விட்டோமே! கைதட்டி அவளை நிற்கச் சொல்லலாமா?" என்று எண்ணினான் கந்தப்பன்.

---

## வசூல் செய்வதற்கு!



"என்னுங்க, எப்போ பார்த்தாலும் வக்கீலு ஐயா பின்னாடியே போய்க்கிட்டு இருக்கிறீங்க? கோர்ட்டிலே ஏதாச்சும் கேசு கீசு போட்டிருக்கீங்களா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க! இந்த வக்கீலு ஐயா மூணு வருஷம் தீபாவளிக்கு நம்ம கடைக்கு வந்து ஏழு பட்டுப் புடவை எடுத்துக்கிட்டு வந்தாரு; அந்தப் பணத்தை வசூல் பண்ணத்தான் அவர் பின்னாடியே போய்க்கிட்டு இருக்கேன்!"

தங்கம் முன் போலவே இடுப்பில் குடத்துடன் சாலை வழியாக வந்து கொண்டிருந்தாள்!

"ஹோல்டான்" என்று கூவினான் கந்தப்பன்.

பஸ் போகிற வேகத்தில் அவனுடைய குரல் டிரைவரின் காதில் விழவில்லை.

பஸ் தங்கத்தை நெருங்கியதும் கந்தப்பன், "ஆ! தங்கம் .....!" என்று கத்தினான். ஆச்சரியமும் உணர்ச்சியும் வேகமாக உந்த நாம் எங்கே இருக்கிறோம் என்ற நினைவே யில்லாமல் அவன் அவளை நோக்கி இரு கையையும் ஆட்டினான்.

அவ்வளவுதான்; கம்பியைப் பிடித்துக் கொண்டிருந்த கை நழுவியது. அடுத்த நிமிஷம் வேகமாக ஓடிக் கொண்டிருந்த பஸ்ஸிலிருந்து கர்ணம் அடித்து உருண்டு விழுந்தான் கந்தப்பன். பிரயாணிகள் போட்ட கூச்சலில் பஸ் நின்றது. பதறிக் கொண்டே முத்துசாமி கந்தப்பனை நோக்கி ஓடி வந்தான். ஓடி வந்து என்ன பயன்?

மண்டை உடைந்து 'குபுகுபு' வென்று பெருகும் இரத்த வெள்ளத்திலே, பயங்கரமாக நசுக்கப்பட்டிருந்த முகத்துடனும் துடிக்கும் உயிருடனும் விழுந்து கிடந்தான் கந்தப்பன். அவன் பையிலிருந்த சில்லறைகள் சிதறிக் கிடந்தன. அவன் கையிலிருந்த டிக்கெட்டுகளின் பச்சை வெள்ளை நிறமெல்லாம் இரத்தத்தில் தோய்ந்து செஞ்சிவப்பின் சாயையை அடைந்திருந்தன.

அங்கிருந்து ஆஸ்பத்திரிக்குப் போவதற்குள் கந்தப்பனின் கடைசி மூச்சும் நின்று விட்டது!

"மயக்கம் வந்து விழுந்து விட்டான் போலிருக்கிறது!" என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள்!

ஆமாம், தங்கத்திற்காக அவன் உயிரை விட்டான் என்று உலகம் அறியுமா? இல்லை, அவன் காதலி தங்கத்தின் உள்ளமாவது அதை உணருமா?

# அவள் கணவன்!

கூபஸ்ரீ

ராணுவத்திலிருந்து விடுமுறைக்காகக் கிராமத்திற்கு வந்திருந்த ஜமேதார் ஆறுமுகம் கண்ணம்மாவைக் கண்டவுடன் காதல் கொண்டுவிட்டான். மறுநாள் முதல் இருவரும் அடிக்கடி சந்தித்துத் தங்கள் உள்ளத்தைத் திறந்து பேச ஆரம்பித்தார்கள்.

கடைசியில் லீவு கழிந்தது; பிரியும் நாளும் வந்தது. விரைவிலேயே திரும்பி வந்து அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தான் ஆறுமுகம். கண்ணீரும் கம்பலையுமாகப் பொங்கிவரும் துக்கத்துடன் கண்ணம்மாவும் அவனுக்கு விடைகொடுத்து அனுப்பினாள்.

ஆறுமுகம் எங்கேயோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்தானே ஒழிய, அவன் மனம் கண்ணம்மாவைச் சுற்றியே இருந்தது. தன் உள்ளத்தில் பொங்கிவந்த காதல் உணர்ச்சிகளை யெல்லாம் பொழிந்து தன்னிப் பத்துப் பக்கங்களில் அவன் தன் ஆசைக் காதலிக்கு ஒரு அன்பான கடிதம் எழுதினான்.

அன்று முதல் தினம் ஒரு கடிதம் ஆறுமுகத்தினிடமிருந்து கண்ணம்மாவுக்குப் பறந்தது! ஒரு நாள் அவனுக்குக் கடிதம் எழுதத் தவறினால் அவன் உள்ளம் வெடித்துவிடும் போலிருக்கும். "இந்தப் படுபாவி மேலதிகாரிகள் தன்னை விடுதலையாவது செய்கிறார்களா, ஊருக்குப் போய் அவளைக் கலியாணம் செய்து கொள்ள?" என்று அவன் அடிக்கடி தன் மேலதிகாரிகளைச் சபித்துக்கொண்டிருப்பான்.

இரண்டு நீண்ட வருஷங்கள் பர்மா போர் முனையில் உழன்ற பிறகு, ஆவலுடன் ஊருக்கு ஓடி வந்தான் ஆறுமுகம். அடுத்த முகூர்த்தத்திலேயே கண்ணம்மாவைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று துடியாய்த் துடித்தான்.

ஆனால் கண்ணம்மாவின் வீட்டை அடைந்த ஆறுமுகம் அவளுக்கு எற்கெனவே கல்யாணம் ஆகிவிட்டதைக் கேட்டு ஸ்தம்பித்து விட்டான்! இந்த இரண்டு வருடங்களாக ஆறுமுகத்தின் காதல் கடிதங்களை யெல்லாம் தினம் தவறாமல் கண்ணம்மாவிடம் சேர்த்துக் கொண்டிருந்தானே தபால்கார ரங்கையன், அவனையே அவள் மணம் செய்து கொண்டாள் என்று சொல்லக் கேட்டதும், அந்த வீடே இடிந்து அவன் தலைமேல் விழுவது போலிருந்தது!

சைடால்

மூலப்பரு, சேற்றுப்
புண், சொறி, வெள்ளைப்பட்டு, நீர்
பட்ட புண், காயங்கள் முதலிய
வைகளுக்கும் கை கண்ட மருந்து

தயாரிப்பாளர்:
தி சௌத் இந்தியன் மனுபாக்சரிங் கம்பெனி, மதுரை

சிலோன் ஏஜண்டுகள் : எம். சி. ஏ. ஹூதா & கோ., 20, டாம் தெரு, கொழும்பு

---

வைரம்
பொன், வெள்ளி
நகைகளுக்கு

P. A. ராஜு செட்டியார் & பிரதர்
கடைத்தெரு, கோயமுத்தூர்.

தந்தி: "ராஜா"... தபால் பெட்டி, 139, போன், 218.

